# வழுக்கி விழுந்தவள்



விருதை - ந. இராமசாமி





புதுமைப் பிரசுராலயம்
பிராட்வே — சென்னை - 1

முதற் பதிப்பு '52
பதிப்புரிமை பெற்றது





'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**



ஸ்ரீமகள் அச்சகம், சென்னை-1

# பதிப்புரை

பேனாவை ஆயுதமாகக் கொண்டு சமூக விரோதிகளின் மீதும், புரையோடி யிருக்கும் சமூகத்தின் மீதும் போர் புரியும் பேனா வீரர்களில் முக்கியமானவர்களில் ஒருவர் நண்பர் விருதை, ந. இராமசாமி அவர்கள். சமூக சீர்திருத்தமே நோக்கமாய் கொண்டு எழுதிய கற்பனைச் சித்திரம் தான் "**வழுக்கிவிழுந்தவள்**".

சமுதாய சறுக்கு மரத்தில் ஏறி வழுக்கி விழுந்த ஒரு பெண்ணை தமிழகத்திற்கு, எழுத்துக்களால் படம் பிடித்துக் காட்டப்படுகிறது இந்நூலில். இதில் மனோதத்துவங்கள் - சமூக அமைப்பில் நிறைந்து கிடக்கும் ஊழல்கள் - வாழ்க்கையின் மர்மங்கள் இவைகளை நன்கு விளக்கியிருப்பதுடன் அவற்றை போக்கும் வழியினை காட்டியிருக்கிறார் ஆசிரியர்! அவருக்கு எம் நன்றி!

இந்த நூலை எங்கள் வெளியீடாக உங்கள் முன் அனுப்புகிறோம். இதை படித்து ரசித்து இன்புறுவீர்கள் என்ற நல்ல நினைப்பால்!

**பதிப்பகத்தார்.**

விற்பனை உரிமை:

**எம். எஸ். ராமுலு கம்பெனி**

**286, மைனு பஜார், சென்னை - 1**

எழுத்தாளன் உயிர் வாழ வேண்டுமாயின் அவனது நூலை வாங்கி வாசியுங்கள். நண்பர்களுக்கு இரவல் கொடுக்காதீர்கள். படித்த பின்னர் தீயிலிடுங்கள்.

—அறிஞர் : ரஸ்கின்

## நான் :—

- அன்றாட வாழ்க்கையிலே நிகழக்கூடிய நிகழ்ச்சிகளை அடிப்படையாக அமைக்க வேண்டும்.
- கற்பனை மெருகு பின்னணியாகவே நிற்கவேண்டும்.
- உவ மானங்கள், உவமேயங்களை நெருங்கித் தழுவி நிறைந்திருத்தல் வேண்டும்.
- வாழ்க்கையில் நடந்தேறும் எந்தந்த சம்பவங்களை மூடி மறைத்து-மனித சமுதாயத்தை புரையோடச் செய்கிறார்களோ அவற்றை அப்பட்டமாக வரைதல் வேண்டும்.
- ஆண்-பெண் இவ்விரு பாலரின் விருப்பு-வெறுப்புகளை அச்சமின்றி எடுத்து உரைக்க வேண்டும்.
- பொழுது போக்கு இலக்கியமாக இருக்காமல்-படிப்போர் உள்ளங்களை எவ்வகையிலேனும் உறுத்தி உலுக்க வேண்டும்—என்று நினைத்தேன்-எழுதினேன்.

'வழுக்கி விழுந்தவள்' புத்தக வடிவம் பெற்றது. பேச்சு-எழுத்து-ஆகிய இருதுறைகளிலும் கழிந்த பத்து ஆண்டு காலமாக பொதுநலப் பணியாற்றி வரும் நான்-சமூக அமைப்பை அடியோடு தகர்த்து 'புதியதோர் சமுதாயம்' அமைக்க வேண்டுமென்ற வேட்கையினால்-மிக மிக அடித்தளத்திலே மனித வாழ்க்கையில் ஊடாடும் நிகழ்ச்சிகளை எழுதிப்பலன் காண விழைகின்றேன். எனது எண்ணம்

ஈடேறித்தான் வருகிறது என்பதை எனது நூல்களுக்கு வாசகர்கள் தரும் வரவேற்பிலிருந்து உணர்ந்தேன்.

அவ்வுணர்வின் படைப்பே '**வழுக்கி விழுந்தவள்**'. இந் நூலின் தன்மை—போக்கு—பலாபலன்—படிப்போரின் சிந்தனையைப் பொறுத்தது. 'வழுக்கி விழுந்தவள்' வாசகர் களின் விமர்சனத்திற்கு வந்திருக்கிறது. நடு நிலைமையில் நின்று சிந்தியுங்கள். தங்கள் கருத்தில் தோன்றும் பாரபட்ச மற்ற தீர்ப்பை எனக்கு தெரிவித்தால் நான் மகிழ்ச்சி பெறு வேன். நன்றியுடையவனுவேன்.

இதோ......வழுக்கி விழுந்தவள் சம்பந்தப்பட்ட பாத்தி ரங்கள் உங்களோடு பேசப்போகிருர்கள். அன்பு-கருணை இவைகளின் முன்னிலையில் நின்று நேர்மையை நினைவுறுத்தி நீதி வேண்டி கை கூப்பி வணங்கி வேண்டுகிருள் வழுக்கி விழுந்தவள். இனி........படிக்கலாம்.

வண்ண வெளியீடாக வெளிக்கொணர்ந்து-எனக்கு ஆர்வமூட்டி-ஆலோசனை கூறி-மேலு மேலும் புத்தம் புது நூல்கள் எழுதத்தூண்டி-ஆதரவும் நல்கும் **திரு. மி. மதுரம்** அவர்களுக்கும்; எனது நூலை வடிவமாக்கிய **சென்னை புதுமை பிரசுராலயத்தாருக்கும்** எனது அன்புசால் வணக்கம்-நன்றி என்றென்றும் உரித்தாகும்.

கலா நிலையம்
**விருதுநகர்**
**18—2—'52**

அன்பன்,
**விருதை. ந. இராமசாமி.**

# சிறப்புரை

நண்பர் திரு. ந. இராமசாமி அவர்களை நெடு நாட்களாக நான் அறிவேன். அவரது மின்னல் பிரசங்கங்களை மேடைகளில் கேட்டிருக்கிறேன். அன்னாரது நூல்கள் பலவற்றைப் படிக்கும் சந்தர்ப்பங்களும் கிட்டின. அவரது வசன நடையே தனிப்போக்கானது; அலாதியானது, நான் கூறுவது மிகையில்லை என்பதை இக்கதைப் போக்கில் பிரயாணம் செய்யும் போது நீங்களே தெள்ளெனத் தெரிந்து கொள்வீர்கள்.

இன்று தமிழ் நாட்டில் உலவும் எந்தப் புத்தகத்தைப் புரட்டினாலும், எந்தக் கதையைப் படித்தாலும் முன் நிற்பது காதல் விஷயம் தான். இதன் முடிவு ஒன்று விவாகம் அல் விபரீதச்சாவு. இவற்றைப் பற்றி பிரமாதமாக அளந்து கொட்டியிருப்பார் ஆசிரியர், அர்த்தமற்ற வார்த்தைக் குவியல்களைக் கொண்டு. அத்துடன் விட்டு விடுவாரா? அலங்கோல ஆடையுடன் கூடிய அணங்குகளின் ஆபாசப் படங்களை அட்டைப்படமாக வேறு தீட்டி வெளியிட்டு விடுவார்கள். கருத்தொன்றும் மில்லாவிட்டாலும், கவர்ச்சிகரமான மேல் அட்டைப் படங்களுக்குக் குறைச்சல் இருக்காது. சுருங்கக் கூறுமிடத்து, பள்ளிமாணவ, மாணவிகளும், குடும்பப் பெண்களும் கூசுவர் இப்புத்தகங்களை வெளிப்படையாகக் கையில் வைத்திருக்க. இப்பேர்ப்பட்ட தரம் குன்றிய புத்தகங்களால், இன்று தமிழ் நாட்டின் இளம் இதயங்களும், புத்தக உலகமும் பாதிக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால் உண்மையான மனோதத்துவத்தை; சமூக அமைப்பில் இருக்கும் ஊழல்களை; வாழ்க்கையில் அமைந்துள்ள மர்மங்களை; கோணல்களை, கோளாறுகளை வெளிப்

படையாக எடுத்துக்கூறி, அவற்றைக் களைய வழி வகுக்கும் வெகு சில எழுத்தாளர்களில், நண்பர் இராமசாமியும் ஒருவர் என்று நான் திட்டமாகக் கூறுவேன். அதற்குப் போதிய சான்று, அவர் துணிவுடன் தீட்டியுள்ள 'வழுக்கி விழுந்தவள்' ஒன்றே போதும்.

கதையின் முன் பகுதிகளில் வரும் சம்பவங்களும், வார்த்தைகளும் சற்று மிகைப்பட இருந்தாலும், பின் பகுதி ஆழ்ந்த கருத்துடன், அருமையான உபமான, உபமேயங்களுடன் 'ஜிலு, ஜிலு' வென ஓடுகிறது. 'இந்திரன் கெட்டதும் பெண்ணாலே; சந்திரன் கெட்டதும் பெண்ணாலே'' என்ற புராணப் புரட்டு மொழிக்குச் சீட்டுக் கொடுத்து, இக் கதை மூலம் "கமலா கெட்டதும் கணவனாலே; தங்கம் தவித்ததும் கணவனாலே'' என, ஆண்களே சகலவற்றிற்கும் காரணம் என்ற கருத்தை நன்கு தெரிவித்துள்ளார்.

காற்றினில் வரும் கீதம் போல, கனஜோராக மிதந்து செல்கிறது கதை. மிடுக்கான நடை; மின்னல் நெளிவு.

வணக்கம்!

ந. சதானந்தம்
1—2—52

கவிஞன் - தேச பக்தன் - தத்துவ ஞானி - எல்லோருக்கும் காதலே வழிகாட்டி. —இங்கர்சால்

# வழுக்கி விழுந்தவள்

**கலைமணி**

**வாழ்க்கையிலே** கிடைக்கும் இன்பம், சுலபமாக அறுவடையாகும் பயிர் அல்ல. வெகு ஆழத்துக் கிடங்கில் சிரமத்துக்கிடையே சுரங்கத்திலே தோண்டி எடுக்கப்படும் தங்கம். இந்த தங்கத்தை தோண்டி எடுக்க எத்தனையோ தொழிலாளர்கள் கரத்தையும், காலையும், கண்ணையும் ஏன் உயிரைக் கூட இழக்க வேண்டியதிருக்கிறது.

ஆம்! இன்பம் இருக்கிறதே இது துன்பத்தின் இறுதி எல்லை. இங்கேதான் இன்பத்தின் துவக்கமும், வாழ்க்கையில் வந்து போகும் இன்பக் கூறுகள் பலப்பல. இளமை வாழ்வின் இன்ப நாடகத்தில் "பெண்" ஓர் பிரதம நடிகை. வாழ்க்கைத் துறையில் 'காதல்' சுவையான படலம். முக்கியமான கட்டம் எனக் கருதுகிறார்கள். ஆனால்.........?

காதல், பள்ளத்தை நோக்கிப் பாய்ந்தோடும் ஒரு பயங்கரமான நீர் வீழ்ச்சி. இதிலே சிக்கிய இளமை உள்ளங்கள் சின்னஞ் சிறு கூழாங்கற்கள் என்பது எனது அபிப்ராயம். இந்த காதல் அனுபவத்திலே புரண்டு ஓடி இன்பத்தின் எல்லைகாண விரைந்தால் அது மரணக் கோட்டையில் கொண்டு போய் நிறுத்தி விடும் என்று எனக்குத் தெரியும்.

இக்கருத்து அனுபவத்திலே கண்ட முடிபல்ல-ஆராய்ச்சியிலே தெரிந்து கொண்டதுதான். ஆயினும் இக்கருத்தின்மீது ஆழ்ந்த நம்பிக்கை உண்டு எனக்கு. அனுபவத்தின் மூலம் ஆதாரம் பெற ஆசையு மில்லை. என் பெண்மைச் சேர்க்கையிலே கிடைக்கும் இந்தக் காதல் அனுபவத்தை அடியோடு வெறுத்து வந்திருக்கிறேன்.

சுகுணாவுக்காக சுற்றித் திரியும் சுந்தரங்கள் — பள்ளியை விட்டு வண்டியிலே ஏறிச் செல்லும் வனிதாவை விரட்டிச் செல்லும் வடிவேலர்கள்—மோகனாவின் மோகனப் புன்னகைக்காக

மோனத்தவம் புரியும் முத்துக்கள்—சாந்தாவின் தளுக்கு மினுக்கைக் காண 'சத்தியாகிரகம்' செய்யும் சதாசிவன்கள் — நிறைய உண்டு—அங்கிங்கு எனுதபடி எங்கும். தமிழ், ஆங்கில நாவல்களைப் படித்து விட்டு உச்சிமுதல் உள்ளங்கால் வரையுள்ள அங்கம் அத்தனையும் தங்கமென வர்ணித்து காதற் கடிதங்கள் தீட்டி—இன்ப வெறி ஊட்டி—பள்ளி ஓரத்திலே யிருந்து முச்சந்தி வரையிலே சந்தித்து இளமையை கெடுத்துக் கொண்டு நெருக்கடி வரும் போது "ஐயோ பெற்ருேர்கள் மறுக்கிருர்கள்" என்று கூக்குர விட்டுக் கை கழுவிக் கொள்ளும் காதல் ஜோடிகள் பலரை கண்டிருக்கிறேன். "இவள் என் இதயராணி! அதோ ஆண்டாள் —அவள் ஜெகதீஸனின் உறுப்படி" என்றெல்லாம் என்னிடம் கதை அளக்கும் நண்பர்களை கேலி செய்திருக்கிறேன் பல முறைகள். உனக்கு ஒரு குட்டி கிடைக்கா விட்டால் காதலிக்கவே கூடாது என்று அர்த்தமா? என்று ஏளனம் செய்வார்கள் என்னை.

இதனுல் எனக்கு காதல் என்று கேட்டாலே வெறுப்பு தோன்றியது. காதல் கசப்பான—வெறுப்பானதாகப் பட்டதால் என் வாழ்வுத் துறை வேறு திசையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

வானத்தில் மின்னலே தோன்றக் கூடாது என்று தடை விதிக்க முடியுமா? ஆம்! என் வாழ்க்கை விண்ணிலே தோன்றிய மின்னல் அவள்.

"கலைஞனின் உள்ளம் வற்ருத நீரோடை. அதில் சிதறும் அறிவுத் திவலைகளை எண்ண இயலுமா? காட்சியில் கண்ட இன்ப-துன்பத்தை அழியாச் சிருஷ்டியாக ஆக்க வலலவன் கலைஞன். காதலுக்கும் கலைஞனுக்கும் நெருங்கிய தொடர்பு இல்லையெனில் உலகு காதலை உயரியதாக நினைக்குமா? கலைஞனே காதலை காப்பவன்" என்பது உண்மையாக இருக்கலாம். ஆனுல் நான் கலைஞனுக இருப்பினும் காதலைக் கட்டோடு வெறுத்திருக்கிறேன். சீர் கெட்ட நாட்டின் சேற்றுப் பாதையைச் செப்பனிடுவதே கலைஞனின் கடமையாக இருக்க வேண்டுமே தவிர மயக்கம் தரும் காதல் மது அருகிலே கூட செல்லக் கூடாது எனச் சொல்லி வந்திருக்கிறேன். இந்த நாட்டில் எத்தனையோ லட்சக் கணக்கான மக்கள் பசிப் பிணிக்கும் அறியாமைக்கும் இரையானவர்களாக இருக்கும் வரையில் அவர்களுடைய உழைப்பின் பலனைக் கொண்டு கல்வி கற்று அவர்களைக் கவனியாது 'இனிப்புச் சுவை'க்காகத் திரியும் ஒவ்வொரு இளைஞனையும் நான் துரோகி என்றே பேசி

வந்தேன். இத்தகைய தீர்க்கமான முடிவு கொண்டிருந்த நான் கூட......?

என் வாழ்க்கையிலே இந்த மின்னல் வீச்சு ஏற்படும் என்று முன்பே தெரிந்திருந்தால் என் நண்பர்களோடு நடத்திக் கொண்டிருந்த காதல் வெறுப்புப் போரை 'வாபஸ்' வாங்கிக் கொண்டு கண்மூடி மௌனியாய் இருந்திருப்பேன். வரும் காலத்தில் வரக் கூடியதை முன் கூட்டியே வரையறுக்க நான் என்ன 'திரிகால முணர்ந்த தீர்க்கதரிசியா?' அல்லது புராண காலத்து முனி புங்கவனா?

வாயு மண்டலத்தில் ஏற்றத்தாழ்வு ஏற்படின் ஒரு நொடியில் சூறாவளி சுழன்றெழுகிறது. இதைவிட மாபெரும் சக்தி வாய்ந்த மனித மனத்தில் மாறுதல் ஏற்பட்டால் 'புயல்' தோன்றாமல் இருக்க முடியுமா? மனிதன் மைல் கல் அல்ல ஒரே இடத்தில் நின்றுகொண் டிருக்க. பல துறைகளை கடந்து நிலையின்றி நீண்டு போய்க் கொண்டிருக்க வேண்டியவன் மனிதன் என்பதை உணர்ந்தேன்.

அன்றொரு நாள்......என் இதயத்திலே மின்னல் வெட்டிய அந்த நாளைத்தான் சொல்லுகிறேன். எனது நண்பன் ஒருவனின் திருமண விழாவிற்கு மதுரை சென்று விட்டு திரும்பும் போது ...........

வண்டியில் ஏறி அமர்ந்தேன். சுற்றும் முற்றும் சகஜமாகப் பார்த்தேன் வண்டியினுள். எனக்கு எதிர்த்த 'சீட்'டில்தான் அந்த மின்னல் வீச்சு! அவள் தற்செயலாக திரும்பிப் பார்ப்பது போலவே பார்த்தாள் என்னை. அவள் பார்வை என்னை நோக்கித் தான் வருகிறதா என்ற சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள இப்படியும் அப்படியும் திரும்பிப் பார்த்துக் கொண்டேன். என்னை நோக்கித்தான் அந்த வீச்சு வருகிறது என்பதை உறுதிப் படுத்திக் கொண்டேன். அந்த பார்வை ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை குமுறும் வானத்தில் கண்ணைப் பறிக்க வீசும் மின்னல் போல 'பளிச்'சென்று ஒரு வெட்டு வெட்டியது.

எத்தனையோ கட்டழகிகளின் கண் வீச்சுகளை சந்தித்திருக் கிறேன். ஆனால் இந்த வீச்சிலே இருந்த கூர்மையையும்—பள பளப்பையும் எந்த வீச்சுலேயும் கண்டதில்லை. அக் கருவிழிகள் மேலேறி கடைவிழி வந்து என்னைக் கண்டன. கண் உருட்டும் இந்த அபூர்வமான கலையில் பெண்களுக்கே முதற் பரிசு! ஆண்

கள் ஆயிரம் முறை அடுத்து முயன்றாலும் கண் உருட்டும் கலையில் வெல்ல முடியாது பெண்களே.

என் உள்ளத்திலும் உடலிலும் உறைக்க ஒண்ணாத உத்வேகம் ஊடுருவிப் பாய்ந்தது ஊசி மருந்து போல.

வண்டி நகர ஆரம்பித்தது. என் கண்கள் கட்டுக் கடங்காது சென்று அவளை பிடிக்க முயன்றன. நாணத்தால் அவள் கன்னம் சிவப்பேறியது. கண்களிடையே அறப்போர்! யார் கண்கள் வெற்றி பெறுமோ எனத் திகைத்தேன். ஆனாலும் இருவர் கண்களும் ஒன்றை யொன்று கவ்வி கையெழுத்திட்டன சமாதான உடன்படிக்கையிலே!

கற்பனைக்கும் எட்டாத கடைந்தெடுத்த சிலை போன்ற வாளிப்பான உடல்—நடுவகுடு எடுத்து வாரி விட்டு பின்னிய கூந்தல்—அழகு அச்சில் வார்த்தெடுத்த வண்ண முகம்—ஆப்பிள் பழத்தின் நிறத்தை நினைவூட்டும் இதழ் முனைகள் என்றெல்லாம் அவளை வர்ணிக்கலாம்போ லிருந்தது.

நெற்றியிலும் காதோரத்திலும் இரண்டொரு மயிர்க் கற்றைகள் சிதறி காற்றினால் அசைந்து லாவண்யம் புரிந்து கொண்டிருந்தன, வட்ட நிலாவிலே புரளும் சின்னஞ்சிறு மேகத் திரள்கள் போல.

அவள் அமர்ந்திருந்த பெருமிதமும்—அழகுச் சிங்காரிப்பும்—அவளொரு படித்த பெண் மட்டுமல்ல, உலகத்தையும் உணர்ந்தவள்தான் என்பதை தெளிவு படுத்தின.

முதலில் அவளைப் பார்த்துக் கொண்டே யிருக்க வேண்டுமென்று என் மனதில் ஊற்றெடுத்த ஆவல்—அவளோடு பேச வேண்டும்—நெருங்கிப் பழக வேண்டுமென்று— இப்படியே வளரத் தொடங்கிற்று. வேட்டைக்கு விரைந்து செல்லும் 'வேடப் புத்தி'யை மடக்கிக்கட்டுப் படுத்த முயன்றால் முடியுமா? ஆசை அழிவின் ஆழி—இலட்சியத்தின் சிதைவு என்றெல்லாம் எனது அறிவு அகத்துள் புகுந்து ஆழம் பார்த்தது. 'கோல் ஏரியா'வை நோக்கி ஓடிச் செல்லும் பந்தாட்டக்காரன் 'ஆசை பாபத்தின் பிரதி பிம்பம்' என்று நினைப்பானா? நினைக்கவாவது நேரமுண்டா? என் நிலைமையும் அதுதான்.

"கண்ணென்றும் காதென்றும் காட்டி என்னை மயக்க வந்த மாயப் பிசாசுதான் பெண்" என்று பதைக்கிறார் பட்டினத்தார்.

பாவம்! அவருக் கென்னமோ அணங்குகள் மீது அத்தனை ஆத்திரம்! இதோ என் அருகில் இன்ப உருவாய் புன்னகை பூக்க கருவிழிப் போரை சாத்வீகமாய் நடத்துகிறாளே இவளா மாயப் பிசாசு? எனது லட்சியமான நாட்டுப்பணி இவளால் சிதைவுறுமா? யார் சொன்னது? இல்லை! இப்பேர்க் கொத்த நாரீமணி யொருத்தியோடு நாட்டுப்பணி புரிய முடியும் நிச்சயமாக."

இது என் ஆசைமனம் தந்த தீர்ப்பு!

நான் பிரேரேபித்த காதல் தீர்மானம் அவளுடைய சட்ட சபையில் வெட்டு—திருத்தப் பிரேரபணையின்றி நிறைவேறி விட்டது என்பதை கீழ் உதட்டின் ஒரு பக்கத்து முனையை அவள் சுவைப்பதிலே யிருந்து அறிந்து கொண்டேன். இளமை உள்ளத்தில் காதல் தீர்மானத்தை நிறைவேற்ற முடியாதா என்ன? காதல் தீர்மானத்தை இந்து சட்ட திருத்த மசோதா மாதிரி எதிர்ப்பவர்கள் வைதீக ஆஷாட பூதிகளே தவிர, சீர்திருத்த வாதிகள் அல்லர்.

எப்படியோ மனதை திடப்படுத்திக் கொண்டு என் முக வரியை அவளுக்கு கொடுத்தேன். வாங்கிக் கொண்டாள். இதற்கு மேல் எதும் பேசிக்கொள்ள முடிய வில்லை இருவரும். எங்களூர் வந்த வுடனே இறங்கினேன். ஏக்கம் எதிரொலித்தது இருவர் குரலிலும்,

" உங்களை போட்டோ எடுத்துக் கொண்டு போகிறேன்"

"கேமிரா இல்லையே!"

"என் மனதின் ஆழத்தில் ஒரு கேமிரா இருப்பது உங்களுக்கு தெரியுமா?"

இந்த ஜீவனுள்ள பேச்சை அமுதாய்ச் சாய்ந்தாள் அவள். வண்டி நகர ஆரம்பித்தது. கைலாகு கொடுத்தோம். கரங்கள் சேர்ந்தன. அந்த இணைப்பிலே எவ்வளவு இறுக்கம். எனக்கும் அவளுக்கும் இடையே நெடுந் தூரத்தை ஏற்படுத்திக் கொண்டே சென்றது அந்த வண்டி! என் பார்வையி லிருந்து மறையும் வரை நின்று கொண்டே இருந்தேன். இந்த உலகமே வெறிச்சென்று கிடப்பதுபோல தோன்றியது.

அவள் யார்? பெயர் என்ன? ஊர் எது? எனக்கொன்றுமே தெரியாது. ஆனல் என் மனதை ஆட்சி செய்யும் அரசியாய் அமர்ந்து விட்டாள் அப்போதே. பஞ்சினிலே பாயும் நீர் போல் என் உடலின் அணு வெல்லாம் கலந்து விட்டாள்.

* * *

# 6

## கமலா

சலனமே! உனது பெயர்தான் பெண். —ஷேக்ஸ்பியர்

கலந்து விட்டார் அவர் என் நெஞ்சத்திலே! இப்படி யொரு சம்பவம் நடைபெறும் என்று நான் எதிர் பார்க்கவே இல்லை.

ஊரிலிருந்து வந்த களைப்பைவிட இந்த சம்பவம்தான் என் நெஞ்சிலே ஒரு பளுவை உண்டு பண்ணி விட்டது. ஏதோ ஒரு புரியாத பயம் கொடும் முள் போல குத்தி புண் படுத்திக் கொண்டிருந்தது. மிகவும் சோர்ந்துபோ யிருந்தேன். அப்பா என்னென்னவோ கேட்டார். அவற்றிற்கு சரியாகக் கூட பதில் சொல்ல வில்லை.—உணவு செல்ல வில்லை. மனத்திலே மாருத வேதனையும்—சோராத சிந்தனையும்—தீராத கலவரமும் இருக்கும்போது அமைதிக்கு எங்கே போவேன்?

என்னுடைய அறையினுள் நுழைந்தேன். படுக்கையை விரித்து தலை சாய்ந்தேன். கண்ணை மூடிக் கொண்டால் மாத்திரம் தூக்கம் வந்து விடுகிறதா? துக்கமும், ஏக்கமும் தூக்கத்தை வர விடுமா? சிக்கலில் சிக்கி என் உள்ளத்திலிருந்து சொட்டுச் சொட்டாய் இரத்தம் வடியும்போது சாந்தி கிடைக்குமா? ஜன்னல் வழியாக நீலவானை நோக்கினேன். நிலா காய்ந்து கொண்டிருந்தது. பழந்தின்னி வௌவால்கள் இங்கும் அங்கும் பறந்து கொண்டிருந்தன. அந்நிலா வொளியில் நான் சிறுமியா யிருந்த சமயம் இந்த நிலா எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது. இன்று இதே நிலா.........? என் விரகதாபத்தை வளர்க்கிறதே யன்றி விசாரத்தை குறைக்க வில்லை.

பாதை யோரத்திலே படுக்கையின்றி படுத்திருக்கும் பிச்சைக்காரி கூட நிம்மதியாக தூங்குகிருள். ஆனல்... பஞ்சு மெத்தை—ஜில்லென்ற பூங்காற்று—மனமிக்க மலர்த் தோட்டம் இருந்தும் கூட தூக்கம் கொள்ள வில்லை எனக்கு.

நான் எழுந்து உட்கார்ந்தேன். விளக்கை சற்று தூண்டி விட்டேன். அவர் கொடுத்த விலாசத் துண்டை எடுத்துப் பார்த்தேன். அவர் பெயர்............(அழகான பெயர்) சொன்னல் நா இனிக்கும். கேட்டால் காது குளிரும். ஆம்! அவர் பெயர் கலைமணி.

அவருக்கு ஒரு கடிதம் எழுதிப் போடலாம் என்று நினைத்தேன். எழுது கோலினை எடுத்தேன்.

ஒரு பெருமூச்சு நிதானமாய்விட்டு வானத்தைப் பார்த்தேன் நிமிடத்திற்கோர் முறை மேகத் திடம் சிக்கி விடுபட சிரமப்படும் முழுமதி... .....? நானும் விடுபட முடியுமா?

என் மனதிலேயே ஒரு பெரும் போர். வெப்பத்தால் கீறிடும் நிலம்போல என் நெஞ்சம் பிளப்பது போன்ற அதிர்ச்சியும்—கொட்டும் மழையில் குளிர்ந்து கரிசல் பூரிப்பது போன்ற மகிழ்ச்சியும் மாறி—மாறி போரிட்டன. ஏதோ குழப்பம் நடப்பது போல கனமாக இருந்தது இருதயம். கையினால் கெட்டியாக நெஞ்சை அழுத்தினேன்.

"அன்புள்ள........" என்று ஆரம்பிப்பேன். அதைக் கிழித்தெறிவேன். மீண்டும் "அன்பரே" என்று தொடங்குவேன். எழுத் தோட்டம் தடைப்படும். நிறுத்திவிட்டு அந்தக் காகிதத்தையும் கிழித்தெறிவேன். உள்ளத்துப் போரின் உச்சநிலை, வியர்வைத் துளிகள் கொட்டின. அருகிலிருந்த கூஜாவை எடுத்து கொஞ்சம் தண்ணீர் பருகினேன். அந்தத் தண்ணீர் உள்ளே போகாமல் எக்களித்தது. அவ்வளவு குமுறல்.

"நீ அவருக்கு கடிதம் எழுதவே கூடாது"

"கொடுமையான கட்டளை. காதலினால் கனிந்த என் நெஞ்சத்தில் நின்று விட்டார் நிலையாக. என்னால் அவரை மறக்க முடியாது. அவருக்கு கடிதம் எழுதி ... ....."

"அவரை அடைந்து விடலாம் நீ! ஆனால் அந்த உரிமையை இழந்தவள். நீ குறைவற்ற நிறை குட மல்ல."

"இருக்கலாம்! ஆனால் குமுறும் கடலில் குப்புற விழுந்து உயிருக்காக மன்றாடிக் கொண்டிருக்கும் போது ஒரு உயிர்க் கச்சை கிடைத்து இன்பக் கரை சேருவது குற்றமா? உரிமை இல்லை என்று யார் சொல்லுவது? எனக்கு வாழ உரிமை உண்டு."

"உலகம் தூற்றுமே"

"தூற்றுமே என்று பயந்தால் தூர்ந்து போன தூசி படர்ந்த என் வாழ்வை துடைப்பது எப்போது?"

"ஆசையே! நீ வளர்ந்து விட்டாய்."

"என் ஆசை ஆலகால விஷ மல்ல—வளர்ந்து விட்டால் ஆபத்து நேர்ந்திட. என் ஆசை பரிசுத்தமானது. கடிதம் எழுதத்தான் போகிறேன். விரக்தியால் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தேன். இனி......"

என் மனப் போர் தளர்ந்தது. ஆனால் முழுதும் ஓய வில்லை.

அலை கடலை எதிர்த்துப் படகை செலுத்துவதிலே செம் படவனுக்கு எவ்வளவு இன்பம் இருக்கிறதோ...... அதே போல......என் வாழ்க்கையிலே எதிர் நீச்சல் அடித்து செல்வதிலே இன்பம் காண முடியாதா?

இந்தத் தீர்மானத்தோடு நான் கடிதம் எழுதி முடித்தேன்.

அவருடைய பதில் கடிதத்துக்காக காத்துக் கிடந்தேன். பொள்ளாச்சியி லிருந்து நான் புறப்பட்டு வரும்போது சாவின் சன்னிதானத்தை சந்தித்து விட வேண்டுமென்ற எண்ணத் தோடு வந்தேன். எனக்கு ஏற்பட் டிருந்த விரக்தி வாழ்க்கை யிலே வெறுப்பை வளரச் செய்து இறுதியில் மரணத்தை ஏற் பதை தவிர வேறு வழி யில்லை என்ற அளவுக்கு துணியச் செய் தது. புயலில் சிக்கிய கப்பலை நங்கூரத்தால் நிலை நிறுத்துவதைப் போல...மனப் புயலால் சீரழிந்து கொண்டிருந்த எனக்கு நங்கூரம் ஆனார் அவர்.

கழிந்த மூன்று நாட்களுக்குள் நான் என்னவோ போலானேன். மாதுளங்கனிக்காக பறந்து செல்லும் கிளி, நீண்ட தூரம் பறந்து வந்த களைப்பினால் அயர்ந்து போனது போன்ற நிலையில் தான் நானும் இருந்தேன். இன்பத்தை நோக்கி விரைந்து செல்வது போன்ற உணர்வும், அதனால் அயர்வு ஏற்படுவது போன்ற சபல மும் தோன்றியது. ஒரு வேளை அவருடைய கடிதம் கிடைக்கு மானால்.........

அவருடைய பதில் கடிதமும் வந்தது. "கவரை" கிழிப்பதற் குள் என் இருதயத்திலே துடிதுடிப்பு. விரல்களிலே எவ் வளவோ படபடப்பு. காகிதத்தைப் பிரித்தேன். படிக்க ஆரம் பித்தேன்.

"அன்புக்கமலா:

நீ வாழ்க. உன் தேன் சொட்டும் சொற் சித்திரம் கிடைக் கப் பெற்று சிந்தை மகிழ்ந்தேன். நீ கடிதம் எழுதுவாய் என்று எதிர் பார்க்கவே இல்லை. வறுமையிலே வாடிக்கிடந்தவனுக்கு கோடிப் பொன் நாடி வந்தால்......அவன் எத்துணை மகிழ்ச்சி அடைவான்? உவப்பால் உந்தினேன். பெருவுணர்வால் பேத லித்தேன். கட்டற்ற காளை நான். சுயேச்சையே என் மூச்சு. உலகம் எனக்குச் சொந்தம். இலக்கியம் புனைவது—மேடை யில் சொல்மாரி பெய்வது என் பணி. அறிவுக்குப் புலப்படாத

இடமெல்லாம் என் சிந்தனை சிறகடித்துப் பறக்கும். முன்பு இரவும் பகலும் எனக்கு ஒன்றுதான். ஆனல்.........

உன்னை சந்தித்தேனே ரயிலில்—அந்தப் பருவ நாளிலிருந்து இரவு, வேப்பங்காயை விட கசப்பை கொடுக்கிறது என் மனதிற்கு, காற்றைப் போல் கட்டற்று தவழ்ந்து திரிந்த என்னைப் பிடித்து உன் இதயக் கூண்டில் அடைத்து விட்டாய். உன் முன்பு அடிமையானேன். "அடிமைத்தனத்தை அறுத்தெறிவது ஆண்மையின் இலட்சியம்" என்றாலும் உன்னிடமிருந்து என் உள்ளத்தை மீட்டுக்கொள்ள முடியவில்லையே!

உன் உள்ளத்தில் நானும்—என் உள்ளத்தில் நீயும் கலந்தமர்ந்து கொண்டோம்.

நறுங்கவிதையே!

இனி சழக்கர்கள் நிறைந்த சமூகத்தின் முன்னிலையில் கை கட்டி நிற்க மாட்டோம். நமது காதல் 'மகஜரை' சமுதாயத்தின் முன் நிலையில் சமர்ப்பிப்போம்—கண்ணீரால் தீர்ப்பு கேட்போம். வாழ்வு அல்லது தாழ்வு! முடிவு? இதை காலத்தின் சிந்தனைக்கு விட்டு விடுவோம். இதற்கிடையே நாமிருவரும் ஒருமித்து சந்தித்து — மனங் கலந்து பேசி—வரும் காலத்தை வகுக்க வேண்டாமா?

எங்கே? எப்போது சந்திக்கலாம்? உன் அழைப்புக்காகக் காத்திருக்கின்றேன். அல்லது எனது அழைப்பை ஏற்றுக் கொள்வாயா? எதற்கும் உன் பதில் அறிய ஆவல்.

உன் கண்ணாடி கன்னங்களில் காதற்சுவை காண—இன்ப இதழில் 'மது' பருக—கரிய கண்களிலே இன்பநுரை நோக்க—பாலைச் சிரிப்பில் பரவசத்தைப் பார்க்க—காத்திருக்கின்றேன் நான்.

ஓடி வந்து எனக்கொரு.........தருவாயோ?

அன்புள்ள,

கலைமணி.

இளமை வாழ்வின் அடிப்படை இலட்சியம் இன்னதுதான் என்பதை அழகான தமிழில் தீட்டி யிருக்கிறார். கடிதத்தில் தேனூறும் சுவை கண்டேன். படிக்கப் படிக்க ஏதோ ஒரு குறு குறுப்பு என் இதயத்துக்குள் என்னவோ செய்தது. என் மனம் மட்டுமா துளிர்த்தது? இல்லை! என் மேனி பூராவும் இதுவரை அனுபவியாத—மெருகு ஏறிற்று. ஆனல் தண்ணீரை பார்த்த மட்டிலே தாகம் தீர்ந்து விடுமா? இனிப்பு என்று எழுதி நக்கிப் பார்த்தால் இனிக்குமா?

அவரோடு வாழ்ந்தால்......? கவிஞனுலும் கண்டெழுத முடியாத ஒரு அற்புதபுரிக்கு நான் சிறகசைத்து பறந்து செல்லுவது போல பிரமை கொண்டேன்.

அருகிலே நீர்நிலே, கரையிலே ஜீவனேடு மன்ருடிக் கொண்டிருக்கும் மீன், துள்ளி அடித்து நீர்நிலேக்குள் பாய்ந்து ீந்துவதற்கு நினைக்காதா? நினைப்பதோடு நிற்குமா? நிச்சயம் நீர்நிலேக்குள் துள்ளி ஓடத்தானே செய்யும். ஆனல் நான்......?

ஆ! அவர் என் வாழ்க்கையிலோர் இன்பப் பொய்கை அதிலே அசைந்து அசைந்து நான் தாமரையாக ஏன் மிதக்கக் கூடாது?

அவர் எழுதிய அந்தக் கடிதத்தைக் கிழித்து அடுப்பிலே போட்டு விட்டேன். பதில் கடிதத்தை நான்கு வரிகளில் சுருக்கமாகத்தான் எழுத முடிந்தது.

"இனி வாழ்க்கை வாழ்வதற்கே எனும் தத்துவத்திற்கு நம்மிருவர் உறவு ஓர் எடுத்துக் காட்டாக விளங்கட்டும். உள்ளத்தில் அரும்பும் கருத்து மலர்களே கோர்த்து "வாழ்வு" மாலே தொடுப்போம். இதுவே உங்களே நான் வேண்டுவது.

வருகிற ஞாயிற்றுக்கிழமை பொள்ளாச்சி போகிறேன். வரும் வழி அதுதானே! என்னைச் சந்தியுங்கள். நீங்கள் எழுதிய ப. எதிர்காலத்தைப் பற்றி முடிவு செய்வோம்.

தங்கள்,

தாமரை.

என்று எழுதி முடித்தேன். 'தங்கள்' என்ற வார்த்தையை தீட்டும்போது கரம் ஆடியது. விரல்கள் நடுங்கின. பேனுமுனே 'மசியை' கொட்ட மறுத்தது. இருப்பினும் எப்படியோ கிறுக்கி விட்டேன்.

நாளே மறுதினம் ஞாயிற்றுக்கிழமை

கலேமணியைப் பற்றி சிந்தனேயும், என் மனத் திரையில் 'வருங்காலம்' என்ற சினிமாப் படமும்—ஓடிக் கொண்டிருக்காவிடில் சொந்த ஊர் வந்த வுடன் பொள்ளாச்சியிலிருந்து வரும்போது போட்டு வந்த திட்டப்படி இதற்குள் தற்கொலே செய்து கொண்டிருப்பேன்.

வாழ வேண்டும் என்ற ஆசையை வளர்த்துக் கொண்டே வந்தது, அவருடைய திரு உருவமே! என் சித்தத்தை சுலபமாக சிதறடித்து தன் வசம் சேர்த்துக் கொண்ட அவருடைய கவர்ச்சிக் கண்களே மீண்டும் காண வேண்டு மென்ற என் மனம் ஏங்கிற்று. அவரைத் தரிசிக்கும் நாள் வரப் போகிறது.

# கலைமணி

கைச்சரக்கால் காண வொண்ணுப்
பெரும் பதத்தில் - கடையுகமட்டும்
கிடக்கச் செய்வது-முத்தம்!
—பாரதிதாசன்

வரப்போகிறது, வரப்போகிறது என்று அத்தனைபேரும் வண்டிவரும் திசையை ஆவலோடு நோக்கியவாறு நின்றனர். கைகாட்டி இறங்கியது. அது வண்டி வரப்போகிறது என்பதை காட்டும் அறிகுறி! வண்டி வருவதை கைகாட்டி மரம் அறிவிப்பது போல எனது இன்பபுரி பயணத்திற்கு அவளும் ஒரு ரயில் வண்டி தான். 'வருகிறேன்' என்ற அவள் கடிதமே கைகாட்டி மரம்.

அன்றைக்குப் பார்த்து வண்டியும் காலதாமதம் கழித்தே வந்தது. அவளோடு உரையாடல் செய்யும் அந்த சந்திப்பு சீனுக்கு எப்படி வசனம் அமைப்பது என்று தீர்மானிப்பதற்கு நேரம் கிடைத்தது.

ஆடாமல் அசையாமல் மெதுவாக ஸ்டேஷனில்வந்து நீண்ட மூச்சை கிளப்பி நின்றது வண்டி. நானும் 'அப்படியா' இப் பொழுதாவது வந்து சேர்ந்ததே என்று பெருமூச்சு விட்டேன்.

துள்ளிக் குதிக்கும் ஆவலோடு ஒவ்வொரு பெட்டியாக பார்த் துக்கொண்டே வந்தேன். ஒரு வேளை வாராமல் இருந்துவிட் டாளோ? இல்லை. அதோ......

பெண்கள் பெட்டியில் புன்முறுவல் பூக்க - பெருமிதம் பொழிய அமர்ந்திருந்தாள்.

"கடிதம் கிடைத்ததா?"

ஓ! கிடைக்காமலா ஸ்டேஷனில் வந்து காத்துக் கிடக்கி றேன்! சரி! சாப்பாடு......?

"மணியாச்சியிலேயே சாப்பிட்டுவிட்டேன்."

நாங்கள் பேசிக்கொண்டிருப்பது அந்த வண்டிக்குப் பிடிக்க வில்லை போலும். அதற்குள் 'ஊ' என்ற தன் அறிவிப்புக்குரலைக் கொடுத்தது.

"மற்றவை இக்கடிதத்திலே" என்று சொல்லிவிட்டு அடுத்த பெட்டியில் எறிக்கொண்டேன்.

'மதுரையில் இறங்கி ஓர் இடத்திலே தங்கி இருந்து பேசு வோம்' என அக்கடிதத்திலே எழுதிக்கொடுத்திருந்தேன்.

வண்டி நின்றது மதுரையில். நான் வண்டியைவிட்டு இறங்கினேன். ஆனால்......அவள் வண்டியிலேயே அமர்ந்திருந்தாள். ஏன் இறங்கவில்லை? என் மனம் கலக்க மடைந்தது. அருகில் சென்று பேசலாம் என்றாலோ மக்கள் அடிபிடி செய்து முட்டி மோதி வண்டியில் ஏறிக்கொண்டிருந்தார்கள். ஒரே குழப்பம் பிளாட்பாரத்தில்.

வண்டியைத் தாண்டி எதிர்பக்கம் சென்றேன். அவள்,அந்தப் பக்கத்து ஜன்னலோரத்திலேதான் அமர்ந்திருந்தாள்.

“ஏன் இறங்கவில்லை ?”

“அடுத்த காரேஜில் மாமா இருக்கிறார், துணைக்கு என்னோடு வருகிறார். இப்படி வருவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அதனால் இன்னொரு சமயம்......சந்திக்கலாம்.”

“உண்மையாகவா ?”

“பொய் சொல்லுவேனா ?”

“இந்த சந்தர்ப்பத்தை நழுவவிடுவதா ?”

“நான் என்ன செய்வேன் ?”

“சரி! உன் இஷ்டம்.”

என்றேன் சலிப்போடு, சாதாரண சலிப்பல்ல. தோல்வியை சகிக்க முடியாது எதிரொலித்த சலிப்பு, எனது குரலின் தன்மை கோபப்படுவதைப்போல அவளுக்குத் தொனித்திருக்கவேண்டும்.

“என்மீது கோபமா ? உம் சரி! வருவது வரட்டும். அந்தப் பக்கம் வாருங்கள்.”

அவள் குரலில் திடம் தொனித்தது. பிளாட்பாரத்துப் பக்கம் வந்து அவள் நீட்டிய கைப் பெட்டியை வாங்க கரத்தைக்கொண்டு போனேன். பெட்டியின் கைப்பிடியைப் பற்றும்போது மற்றொரு கரம்......அதே நேரம் பெட்டியை கைப்பற்றியது. என் கரத்தை மெதுவாக உருவிக் கொண்டேன்.

அந்த ஆசாமி பெட்டியை வாங்கி பிளாட்பாரத்தில் வைத்தான். அவன் “டிப்டாப்” ஆக உடை அணிந்திருந்தான். அவன் யார் ? ஒரு வேளை இந்த ஆசாமி அவளுடைய “மாமா” வாக இருக்குமோ ?

சற்று தூரமாக விலகி நின்று கொண்டேன். அவளோடு ‘ஏதோ’ பேசிக்கொண்டிருந்தான் அவன். எனக்கொன்றுமே விளங்கவில்லை. இந்த கட்டம் விறுவிறுப்பாக சில விநாடிகளில் நடந்தேறிற்று.

வண்டி புறப்பட்டுவிட்டது, திடீரென்று வண்டிக்குள்ளிருந்த ஒரு மனிதன் தலையை நீட்டி "கமலா" எனக் கத்தினார். "அடுத்த வண்டிக்கு வந்துவிடுகிறேன்" என்று பதில் குரல் கொடுத்தாள் அவள். அந்த மனிதனுக்கு இருந்த பதட்டத்தி லிருந்து எங்கே வெளியே குதித்து விடுவாரோ என்று பதறிப் போனேன். வண்டியில் போகும் அவர்தான் மாமா! அப்படி யானால் "இவன் யார்?"

வாயில் டிக்கெட்டை வைத்துக் கடித்துக்கொண்டே தன் அருகில் வரும்படி தலையை அசைத்தாள் அவள். அருகில் சென்றவுடன் அந்தப் பேர்வழி "மிஸ்டர் நீங்கள் யார்?" என்று அதிகாரத் தொனியில் கேட்டான்.

"நான் மனிதன்"

"அது பார்த்தாலே தெரிகிறது. இந்தப் பெண் யார்?"

"அனுவசியமான கேள்வி."

"உங்கள் இரண்டுபேரையும் "சஸ்பெக்ட்" பண்ணுகிறேன்."

"எங்களை சஸ்பெக்ட் பண்ண நீங்கள் யார்?"

இப்படி இடையே சுருக்கென்று கேட்டுவிட்டாள் அவள். அவன் புருவம் நெளிந்தது. பக்கத்திலே யிருந்த "போர்டர்" இவரு சி. ஐ. டி. என்று வக்கீலாக ஆஜரானான்.

"சஸ்பெக்ட் பண்ணினால் சட்டப்படி செய்யுங்கள் என்றேன்"

எங்களை போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றான். சப் இன்ஸ்பெக்டர் முன்னிலையில் நிறுத்தப்பட்டோம். திருடினோமா? கொலை செய்தோமா? கொள்ளை அடித்தோமா? பிறகு என் குற்றவாளிகளாக கைகட்டி நிற்கவேண்டும்? இளமை ததும்பும் இரு உள்ளங்கள் சந்திப்பதைத் தடுக்க எவருக்குமே அதிகாரமில்லாதபோது எங்கள் உறவை சந்தேகப்பட இவர்கள் யார்? பொது மக்களின் வரிப்பணத்தை கொட்டி அழுது இவர்களை பாதுகாப்பிற்காக வைத்திருப்பது இதற்குத் தானா? இச்சமயம் 'விகடயோகி' என்ற சினிமாப் படமே என் நினைவுக்கு வந்தது.

போலீஸார் அரட்டினர். மிரட்டிப் பார்த்தனர். 3000 ரூபாய் பெறுமான நகைகள் போட்டிருக்கிறாயே. இவன் அவ்வளவையும் அபகரித்துக் கொண்டால் என்ன செய்வாய்?" என்று சப்-இன்ஸ்பெக்டர் அவளைக் கேட்டார்.

"பரவாயில்லை" என்று ஆங்கிலத்தில் அலட்சியமாக பதில் அளித்தாள். அதற்குமேல் அவர்களால் என்ன செய்யமுடியும்? நானும் அவளும் கணவன் மனைவி என்றுதான் சாதிக்கிறோமே. அசடுவழிய எறிட்டுப் பார்த்தார் சப்-இன்ஸ்பெக்டர் எங்களை சிறை பிடித்துவந்த சூரப்புலியை! கணவன் மனைவி என்று எங்களிடம் எழுதி வாங்கிக்கொண்டார்கள்.

"சரி போகலாம்" என்றார் போலீஸ் அதிகாரி, ஸ்டேஷனுக்கு வெளியே வந்தோம். இந்த 'சினிமா வேடிக்கையை' எத்தனையோ பேர் ஆனந்தமாய் ரஸித்துக் கொண்டிருந்தனர். 'கௌரவமான' மனிதன் என்ற டிகிரி பெற்றிருந்த எனக்கு இது எவ்வளவோ கேவலமாக இருந்தது. பாவம்! அவள் மனம் என்னபாடு பட்டிருக்குமோ! ஒரு குதிரை வண்டியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு புறப்பட்டோம். அப்போதுகூட எங்களை கூர்ந்து கவனித்தனர். சில நிரந்தர 'வில்லன்'கள் அவர்களுடைய அகராதியிலுள்ள வார்த்தைப்படி 'கவர்' பண்ணினார்கள் எங்களை. ஆனால்...

நாங்கள் எவரையும் லட்சியம் பண்ணவில்லை. எதிர்ப்பு முதற் படியிலேயே முளைத்து விட்டது. எனினும் சளைக்கவில்லை. எதிர்ப்பை இருகை எந்தி வரவேற்றோம். எக்காளம்பேசிய எத்தர்களைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தோம். கடலில் தவிப்பவன் கரைசேர மரத்துண்டு கிடைத்தவுடன் பிடியைத் தளரவிடுவானா?

இன்பக்கரை வந்து சேர்ந்தோம், இக் கரையிலே இப்படியே இருந்துவிடக் கூடாதா! ஆயுள் வரையிலும்?

மதுரை சத்திரமொன்றில் அறை எடுத்தேன், அவளை அறையில் இருக்க வைத்துவிட்டு ஹோட்டலுக்குப் போய் பால் வாங்கிக்கொண்டு வந்தேன். ஒரு கிண்ணத்தில் பாலை வார்த்து நீட்டினேன் அவளிடம்.

"ஊ......ஹீம்......நீங்கள் குடித்துவிட்டுக் கொடுங்கள்" தன் வீணை நாதத்தை மீட்டினாள் நீட்டிய கிண்ணத்தை வாங்காமல்.

"சும்மா......கொஞ்சம் போல" என்று சொல்லி மீண்டும் கொடுத்தேன். என் கையிலிருந்த கிண்ணத்தை வாங்கி என் வாயில் காட்டினாள் - இல்லை - ஊட்டினாள். சிறிதளவு குடித்தேன். அதற்குள் மீதியை அவள் பருகினாள். என் உயிரைக் கலந்து கொடுத்து விட்டேனா? இல்லாமலா என் இருதயம் அப்படித் துடித்தது.

முதலில் எங்கள் விரல்கள் தான் விளையாடத் தொடங்கின. ஏதேதோ பேசினுள், நானும் பேசினேன். ஆனல் சுவை இல்லை. காதலர்கள் சந்தித்த உடனே காதற் கனிமொழிகளைக் கொட்டித் தள்ளிவிடுவதாக நாவல்களில் படிக்கிறோம். சினிமா-நாடகங்களில் பார்க்கிறோம். ஆனல் அனுபவத்திலே மளமளவென்று தங்கு தடையின்றி பேசவோ - கேட்கவோ முடியாது எனச் செயலில் கண்டேன். ஸ்பரிச உணர்ச்சி ஏற்பட்டபின் பேசிக்கொண்டே இருக்க முடியுமா ?

இந்த முதல் இரவை பாழும் மௌனத்தால் கழிப்பதா ?

கட்டிலை ஜாடையாகப் பார்த்தேன். அவள் கடைவாயில் ஒரு புன்முறுவலை சிந்தினுள். அது என் உள்ளத்தில் பகீரென்று புகுந்தது. ஆனல் அவள் வாயிலிருந்து 'வேண்டாம்' என்ற வார்த்தை தெறித்து விழுந்தது, பெண்மை பிகு பண்ணும் என்பார்களே இது இப்படித்தான் போலும்.

என் உடல் பூராவும் வெப்பத்தால் தகித்தது. கடும் வெயிலில் கால் வெந்துபோக நடந்தவன் நிழலைக் கண்டால் நின்று களைப்பாறத்தானே நினைப்பான். வெப்பம் - வேட்கை இரண்டும் என் உடலை முருக்கிவிட்டன, குளிர் புனல் ஓடை அருகில் இருக்கும்போது......நான் என் வெப்பத்தால் - வேட்கையால் வாடி வதங்கவேண்டும் ? எனக்கும் அவளுக்கும் இடையே இருந்த தூரம் ஒரு அடிதான். அதுவும் சுருங்கிற்று. மிகமிக நெருங்கிவிட்டேன்.

அந்த க்ஷணநேர நிகழ்ச்சி ! அவள் கடிமலர் இதழில் என் கன இதழை ஊன்றி வேரோடு பதித்தேன் முத்தம். ஒன்றல்ல—பல.

*　　　*　　　*

காலைநேரத்து ஊதல் காற்று அறைக்குள் புகுந்தது. கண்ணை விழித்தேன். அவள் எனக்கு முன்பே எழுந்து விட்டாள். என் கண்விழிப்புக்காக காத்திருந்தாள்.

காலைப் பலகாரம் வாங்கிக்கொண்டு வந்தேன். ஒரே இலையில் இருவரும் ஒருவருக்கொருவர் பரிமாறி உண்டோம். வாத்ஸல்யம் ! பரிவு! பக்தி! அத்தனையும் கலந்து விளையாடின. மனங்கமழும் இல்லறம் இப்படித்தானே இருக்க முடியும்.

காந்தி ஒளிவீச எந்தினேன் இன்பத்தை மாந்தினேன் மணத்தை, ஆனல் அவள் இன்னும் சற்று நேரத்தில் போகப் போகிருள் !

# கமலா

சந்தர்ப்பம் தானாக வருவதல்ல-
எந்த சந்தர்ப்பத்தையும் மனிதனே
உண்டுபண்ணிக் கொள்ள வேண்
டும். —பெர்னாட்ஷா

போகப் போகிறேன் ஊருக்கு என்றவுடன் அவர் முகம் சுருங்கி விட்டது தொட்டாற் சுருங்கி இலை போல.

அறையைக் காலி செய்து விட்டு புறப்படத் தயாரானோம். இருவரும் நிலக்கண்ணாடி முன் ஒரு முறை பார்த்துக் கொண்டோம். என் அருகிலே அன்புருவாய் அவர் நிற்பதை மட்டிலுமா அந்த நிலைக் கண்ணாடி காட்டியது? அவர் எனக்கேற்ற துணைவர் என்பதையும் தெற்றெனக் காட்டியது. மற்றொரு ஜீவ முத்தம் அவரிட மிருந்து பெற வேண்டு மென்று என் உள்ளம் அலமருந்தது. பெண்மையால் கட்டுப்படுத்திவிட நினைத்தேன். அடக்க முடியாத ஆவல் பீறிட்டது மடைநீர் போல. "ஒரு...... .........த்.........த.........ம்" என்று கேட்டே விட்டேன்.

"உம் வேணுமா?" என்று கொஞ்சுங் குரலில் கேட்டவாறு முத்த மழை பொழிந்தார்.

சத்திரத்தி லிருந்து வெளி யேறினோம். "குதிரை வண்டியில் போவோமே" என்றார் அவர். "வேண்டாம்—நடந்தே போகலாம்" என்றேன். அவரோடு வீதியிலே நடந்து போக வேண்டு மென்று எனக்கொரு ஆசை. இருவரும் உல்லாசமாக கடை வீதிகளில் நடந்து சென்றோம். இப்படி அவரோடு ஜோடியாக நடந்து வந்ததிலே எவ்வளவு இன்பம் கண்டேன். குடை ராட்டினத்திலே சுற்றி விளையாடும் குழந்தை போல குதூகலம் கொண்டேன்.

காலை வண்டிக்கே அங்கிருந்து புறப்பட்டு விட்டேன். முழு மனமின்றி விடை தந்தார். வண்டி கிளம்பும் போது என் கண்களில் நீர் துளிர்த்தது. அவருடைய கண்கள் கலங்கிப் போயிருந்தன.

மறக்கமாட்டீர்களே? என்று என் மன்றாடும் குரலை எழுப்பினேன். "மறக்க முடியுமா? அவ்விதமா நாம் பழகினோம். ஊருக்குப் போனவுடன் கடிதம் எழுது. கடிதம் கிடைத்த பின்னரே என் கவலை குறையும்" என்று கூறினார்.

வண்டியின் பேரிரைச்சலொடு என் உள்ளக் குமுறல் போட்டி யிட்டது. கண்ணீர் துளி தெளிவற்றுப் போன என் பார்வையி லிருந்து அவருடைய அழகு உருவம் சிறுகச் சிறுக மறைய ஆரம் பித்தது.

மதுரையி லிருந்து அவரைப் பிரிந்து வந்தேன். ஆனால், அவரிடம் வாழ்வை ஒப்படைத்து வந்து விட்டேனே. தாமரை இலைத் தண்ணீர் போல பட்டும் படாததுமாய் இவ்வுலக வாழ்வில் ஒவ்வொரு விநாடியையும் கழித்து வந்த எனக்கு—மீண்டும் வாழ் வில் பற்று தீர்க்கமாய் ஏற்பட்டது அவருடைய தொடர்பால். வாழ்க்கையில் எவ்வித பிடிப்பும் இல்லாமல் தவித்துக் கொண் டிருந்த நான் தங்குமிடம் கண்டேன். ஆனால் எங்கும் நாள் இன் னமுமா? தாங்கும் இதயமும் தளர்ந்து வருகிறதே! இது புரி யாத் தவிப்பாகத் தோன்றலாம் பிறருக்கு. எனக்கல்லவா துன்ப தேவதையின் முழு உருவும் தெரியும்.

எனக்கு அப்படி என்ன குறை வந்து விட்டது? நான் அழ காக இருக்கிறேனாம். எல்லோரும் சொல்லுகிறார்கள். பிறர் கண்ணை உறுத்தும் அழகு மட்டும் இருந்தால் போதுமா? இக் கேள்விக்குக் கிடைக்கும் விடை..............? சிந்தனையின் சிக ரத்தை கேவிகேவி எட்டிப் பிடிக்க முயன்றபோது.........கடந்த காலம் என் முன்பு பேயாட்டம் ஆடிற்று. கோர்வை பிசகாமல் அடுக்கடுக்காய் கடந்த கால என் வாழ்வுப் படலங்கள் புரண்டன.

* * *

நான் செல்வம் செழிக்கும் சிறப்பான குடும்பத்திலே பிறந்த வள். எனக்கு ஐந்தாவது வயது நடக்கும்போதே பெற்ற தாயைப் பறி கொடுத்தேன். அப்பா நாகர் கோவில் வட்டாரத் தில் பிரபலமான வழக்கறிஞர். வக்கீல் தொழில் மூலம் திரண்ட பொருளைக் குவித்த வண்ண மிருந்தார். தாயார் இறந்த பின் இரண்டாந்தாரம் செய்துகொள்ளும்படி அப்பாவை தொந்தரவு செய்து வந்தனர். அவர் ஆரம்பத்திலே மறுத்து வந்தார். உங் கள் கமலாவை போஷிக்க—ஆளாக்க ஒருத்தி வேண்டாமா? என்று சிலர் அடிக்கடி அப்பாவிடம் கூறியது இன்னும் எனக்கு நன்றாக நினை விருக்கிறது. கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையு மென்பார்களே! அப்பா மனம் என்ன கல்லைவிடக் கடின மானதா?

ஞானசௌந்தரிக்கு ஒரு லேனா சிற்றன்னை கிடைத்த மாதிரி எனக்கொரு சின்னம்மா வந்து சேர்ந்தாள். நல்ல வேளை எனது சின்னம்மா என்னை தண்ணீர் எடுக்கவும்—வீட்டைப் பெறுக்கவும்

—நெல் குத்தவும் சொல்லி இம்சிக்க வில்லை ஞானசௌந்தரியின் சின்னம்மா போல. எனக்கு வயது வளர வளர சின்னம்மாவின் இம்சை வேறு முறையிலே இருந்தது.

அவளுக்கு ஒரு தம்பி. அவர் பெயர் முத்தண்ணு' அவரும் எங்கள் வீட்டோடுதான் இருந்தார். அவரை எங்கள் வீட்டோடு கொண்டு வந்து சின்னம்மா வைத்துக் கொண்டிருந்ததின் காரணம் போகப் போகத்தான் தெரிய ஆரம்பித்தது. ஒரு வேளை சின்னம்மாவுக்கும், அப்பாவுக்கும் "அந்த ரகஸியம்" தெரிந்திருக்கலாம். அப்படியொன்றும் அது பிரமாதமான ரகஸியம் அல்ல! எனக்கும் அவருக்கும் பால்யத்திலேயே அன்பு சுரந்து விட்டால் பிற்காலத்தில் முடிச்சு போட்டு விடலாம்.

நானும் அவரும் ஒன்றுகவே படித்து வந்தோம். பால்யத்திலே பழகி வந்ததால் பிறர் எவராலும் பிரிக்க முடியாத பிரேமை கயஸுக்கும் லைலாவுக்கும் இடையே பூத்திருக்கலாம். ஆனுல் கயஸ்லைலா அல்ல நானும் அவரும். இந்தப் புதிர்........பருவமான பின்னர்தான் எனக்குப் புரிந்தது. நான் பெரிய மனுஷியாகி விட்டேனும், இனி அடக்க ஒடுக்கமாக நடந்து கொள்ள வேண்டுமாம். பருவமானவளுக்கு "அடக்கமாய் நட" என்று புத்தியா பகர வேண்டும்? பருவம் பிறக்கும்போதே நாணமும் கூடவே பிறந்து விடுகிறதே............

கன்னியாகுமரியின் இயற்கை அழகைபற்றி விவரிக்கவா வேண்டும்? இந்த ஊரிலே பிறந்ததற்காக பெருமைப் படுகிறேன் நான். ஆடும் குமரி கடலோரத்தில் ஆனந்தம் பாடித் திரிந்த என் சிறுமிப் பருவம் அழிந்தது. குமரியானேன். குமரிக் கடல் முனையை—மாலைக் கதிரவனின் களிக் கூத்தை—மணல் தேரியின் மாண்பை—இனிமேல் கடற் கரையிலே நின்று கண்டு களிக்க முடியாது மணமாகும் வரை.

பருவம் என் உடல் பூராவும் புத்தம் புது மாறுதலை ஏற்படுத்தி விட்டது. பெண் வளர்ச்சி சுரக்காயைப் போல என்பார்களே— அது உண்மைதான்.

வீடு சிறையானல் நான் கைதிதானே!

ஆனுல், அரசியல் கைதிக்கு சில சலுகைகள் கிடைப்ப தில்லையா? அதுபோல, ஏதோ ஸ்கூல் பைனல் தேறியவள் என்பதற்காவும்—செல்வந்தர் வீட்டுப் பிள்ளையாக பிறந்திருப்பதாலும் மேல் நாட்டு நாகரீக வாடை எங்கள் வீட்டில் சில நேரங்களில் வீசுவதாலும் எனக்கு சில உரிமைகள் கிடைத்தன. இதன் பயனுக நூல்

களின் மூலம்—எனது அப்பாவிடம் வரும் வழக்குகளின் கதைகளை நேரடியாக கேட்டுக் கொள்வதின் மூலம்—நான் இந்த உலகத்தை போதுமான அளவு அறிந்து கொண்டேன் என்றே நினைக்கிறேன்.

இதனுல் உலகெங்கும் நடமாடித் திரிகிறதே காதல்—இதைப் பற்றி ஓரளவு அறிந்து கொண்டிருந்தேன், பருவப் பெண்ணின் மனம் செழிப்பான நிலம். அதிலே காதற் செடி வளருவது எளிது மட்டு மல்ல—இயற்கையின் நியதி இது. காதற் குளத்திலே நீராட தீராத ஆசை தான். ஆனுல்......ஆணே பெண்ணே ஒருவர் மட்டும் தனித்து போனுல் அது "ஹனிமூன்" ஆகி விடுமா? அதற்கு ஜோடி வேண்டாமா? ஒற்றைச் செருப்பைப் போட்டுக் கொண்டு நடக்க முடியுமா?

என் மனதுக்குப் பிடித்தமான ஒரு ஆண் மகனைக் காதலித்து திருமணம் செய்துகொண்டு எல்லையற்ற இன்ப வானிலே ஜோடியாக பறந்து என்றுமே "ஹனிமூன்" ஆக வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன். எனக்கொரு காதலன் கிடைக்கும் சந்தர்ப்பம் இது வரை கிட்டவே இல்லை. நினைத்த வுடன் திடீரென்று அவதரித்து ஆசீர்வதிக்கும் சினிமாக் கடவுளா இந்தக் காதல். அந்தக் காலத்திலாவது சுயவரம் இருந்தது. இந்தக் காலத்தில் அப்படி ஒரு சுயவரம் இருந்தால் மனங் கவரும் மணவாளருக்கு மாலையிட்டு மகளிர் எவ்வளவு மகிழ்ச்சியோடு வாழ்வார்கள். காதல் கட்சிக்கு தடை விதித் திருக்கும் இந்தப் பெற்ருேர்கள் சுயம்வரம் நடத்த பைத்தியக்காரர்களா என்ன?

இப்படிப்பட்ட காதல் பித்து கொண்டு வாழும் என்னை 'பாலைவன வாழ்வுக்குப் போ' என்கிருர்கள் அப்பாவும், சின்னம்மாவும்.

வாலிபம் நிரம்பி வாட்ட சாட்டமாய் வளர்ந்திருக்கும் முத்தண்ணுவோடு நெருங்கிப் பழக எனக்கு உரிமையும், அனுமதியும் கொடுத்திருந்தார்கள் வீட்டிலே. ஆனுல் அவர்மீது கொஞ்சம் கூட காதல் பிறக்க வில்லை என் கருத்தில். அவரைப் பார்த்தாலே எனக்கொரு அறு வெறுப்பு.

அவருடைய அக்கா என் சின்னம்மா கொடுத்த 'சர்டிபிகேட்டை' வைத்துக் கொண்டு என்னைப் பிடிக்க பலமாக முயன்ருர் முத்தண்ணு. இரவு பகல் என்றும் பாராமல் அவர் கண்ணில் பட்டபோ தெல்லாம் குறுகுறு வென்று பார்ப்பதும் குழைந்து குழைந்து பேசுவதும்—வாயிற்படி தாண்டும் சமயம் பார்த்து எதி

ரேவந்து மார்பில் இடிப்பதும்—இப்படிப் பலவிதமான போர் முனை எற்படுத்தினர். 'மாமா' என்ற முறையில் என்ன பேச வேண்டுமோ—அதுவும் அவசியம் எற்பட்டால்தான் பேசிக் கொள்வேன் "அவன் யார்? அவன் வேற்று ஆளா? நாளைக்கு பெண்டாட்டி ஆகப் போகிற நீ இப்படி சினந்து நடந்து கொள்ளலாமா?" என்று புத்திமதிப்படலத்தை, தினசரியும் வாசிப்பாள் சின்னம்மா. இந்த விஷயத்தில் அவள் பேச்சைக் கேட்க மறுத்தேன். அதனுல் என் மீது அதிகமாக கெடுபிடி செய்தாள். அடக்குமுறை பாணத்தை பலமாகப் பிரயோகித்தாள், அவளொரு அசல் சின்னம்மா என்பதை என் பருவசதுக்குப் பின் காட்ட ஆரம்பித்து விட்டாள்.

அப்பாவிடம் பலமுறைகள் முறையிட்டேன். அவர் சின்னம்மாவின் பொடி மயக்கத்தில் சொக்கிப் போய் கிடந்தார். "இப்படி வயசுப் பொண்ணை வீட்டிலேயே வைத்துக் கொண்டிருப்பது நல்லா இருக்கா?" என்ற பல்லவியை அப்பாவிடம் அடிக்கடி ஆலாபனம் செய்துகொண்டே இருந்தாள் சின்னம்மா.

சின்னம்மாவின் நச்சரிப்பு அதிகரிக்க அதிகரிக்க அப்பா என் விருப்பத்திற்கு விரோதமாக வேம்பைவிடக் கசப்பான முத்தண்ணுவை எனக்கு மணமுடிக்க முடிவு கட்டி விட்டார்.

மொக்காக இருக்கும் நான் பாலைவனத்திலே மலராக பூப்பதா? என் மணம் .......பாலையில் பரபரக்கும் பயனற்ற காற்ரூடு பரவ வேண்டியதுதானு?

* * *

என்சிந்தனை ஓட்டம் நின்றது. இதற்கு மேற்கடந்த நாட்களை நினைத்துப் பார்க்கவே பயமாக இருந்தது. நிற்பதோ மலைஉச்சியின் சின்னஞ் சிறு பாறையிலே சிறிது கவனமின்றி காலை எடுத்து வைத்து விட்டால்—என்னை விழுங்கக் காத்திருக்கிறது, கீழே படு பாதாளம். பிறகு எப்படி சிந்தனை இடையுருது செல்லமுடியும்?

கடந்த காலத்தை நோக்கி விரைந்தோடிய மனக்குதிரையை, கடிவாளத்தை சுண்டிப் பிடித்து இழுத்து நிறுத்தினேன்.

நான் தையல் மிஷினில் அணு அணுவாய்த் துளைக்கப்படும் துணிபோலானேன்.

குழந்தைகளிடையே பழகி உலகை மறக்க நல்லதொரு வாய்ப்புக் கிடைக்கும், உபாத்தியாயினி உத்தியோகமே எனக்கு! பொள்ளாச்சி வந்த பிறகு தினசரியும் பள்ளியில் குழந்தைகளோடு உறவாடத்தான் செய்கிறேன். பாடத்தை எடுத்து நடத்திக் கொண்டேயிருப்பேன். 'டக்' கென்று ஒரு கணம் என் சிந்தனை நின்று விறுவிறு வென்று மதுரை நிகழ்ச்சிக்கு ஓடும். இப்படிப்

பட்ட நேரங்களில் மனப்போக்கை பிடித்துக் கட்டிவிட முயலுவேன். ஆனால்.........?

"ஊருக்குப் போய்விட்டு வந்த பின்னர் ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? உடம்புக்கு ஏதாவது சுகக் குறைவா?" என்று எல்லோரும் கேட்டனர். "ஏன்?" இந்த வினாவுக்கு விடை அளித்தால்.....ஐயோ! நான் உயிர் வாழமுடியுமா? வெட்கம் கெட்டவள் என்று மட்டுமா தூற்றுவார்கள்? நினைக்கவே நெஞ்சு படபட வென்று அடித்துக் கொள்கிறதே—தரையில் தூக்கி எறியப்பட்ட மீன் போல!

நான் கசாப்புக்காரன் கையில் சிக்கிவிட்ட ஆடுதானா? பரமன் ஏன் என்னைப் படைத்தான்? பெண் வர்க்கத்தின்மீது பரமனுக்கு இத்தனை வஞ்சமா? வேலையற்ற நேரத்தில் விளையாட்டுக்காக என்னை சிருஷ்டித்தானா? முன் செய்த தீவினைப் பயன் வாதந்தான், இந்தப் புதிர் பூட்டின் சாவியா? கடவுள் கல் நெஞ்சன். பூவுலகம் புண்யத்தின் பிறப்பிடமல்ல. பெண் பாவப்படைப்பு! நான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்? [மானால்?...

என் அவல வாழ்க்கையைப் பற்றி கலைமணிக்குத் தெரியு

ஏன் மறுபடியும் வீண் சர்ச்சை? கலைமணி மனித ஹிருதயம் படைத்தவர், விரக்தி - வேட்கை இரண்டின் சங்கமத்தால் வாழ்க்கையில் ஜனித்த பயத்தை, இல்லை, குழப்பத்தை கலைமணி தீர்க்க மாட்டாரா? அவருக்கும் மனச் சாட்சி உண்டல்லவா?

மனித வர்க்கத்தின் மத்தியில் இப்படி சாம்பிக் குவிந்து நான் சாகவேண்டியவளா?

ஒருவேளை யாரிடமாவது மனங்கலந்து பேசிப் பொழுது போக்கினால் மனம் பழுக்குறையாதா? திருச்சியிலிருக்கும் என் சிற்றப்பா மகன் ராஜனை இங்கு வரும்படி செய்தால்......? ஆம்! அதுதான் சரி! கடிதம் எழுதிப் போட்டேன்.

தலைச்சுமையோடு நீண்டதூரம் பிரயாணம் செய்து களைத்துப் போனவன் வழியிலே சுமைதாங்கிக் கல்லில் சுமையை சற்று இறக்கிவைத்து விட்டு இளைப்பாறுவதில்லையா?

தம்பி ராஜன் என் சொல்லை தட்டி நடக்கமாட்டான்! அமைதியாக எதையும் கேட்டுக்கொண்டே இருந்து ஆறுதல் சொல்லுவதிலே சமர்த்துக்காரன். "அக்கா! உங்களுக்காக உயிர் தியாகம் கூட செய்வேன்" என்று அடிக்கடி நான் கவலைப்படும் நேரங்களில் சொல்லுவான். அவனுக்கு இப்பொழுது பரீட்சை வைத்து சோதித்து வி–லாம், கட்டாயம் வருவான். இப்பொழுது அவனுக்கு கோடை விடுமுறை.

# இராசன்

ஒவ்வொருவருடைய வாழ்க்கையைப் பற்றியும் ஆராயும் குணமே விஞ்ஞானம்.

—டாக்டர் லின் யுடாங்

"கோடை விடுமுறைக்கு வா-உன்னைப் பார்க்க வேண்டும்" என்று அக்காள் கடிதம் எழுதியிருந்தார்கள். எனது நண்பர்கள் சிலரோடு கோடை விடுமுறைக்கு எல்லோரா போவதாக இருந்தேன்—உல்லாசத்துக்காக அல்ல—ஓவியக் கலையின் உன்னதத்தைக் கண்டு களிக்க. ஆனால், அக்கா பொள்ளாச்சிக்கு வரும்படி எழுதி விட்டார்களே! இனி அந்த அழைப்பைத் தட்டிக் கழிக்க முடியுமா? அக்காள் என்மீது எவ்வளவு வாஞ்சை காட்டிவந்திருக்கிறார்கள்?

எங்கள் பெரியப்பா வகையில் யாரையும் எனக்கு சுத்தமாகப் பிடிக்காது அக்காளைத் தவிர! அவர்கள் எல்லாம் உல்லாசபுரிச் சீமான்கள்! பெரியப்பா பணப் படுக்கையில் புரளுகிறார். வாயுவே ஆகாரம்—வானமே உடைமை என்று ஆயிரமாயிரம் தோழர்கள் வாழும் இந்த பாழாய்ப்போன நாட்டிலே பாலுஞ்சோறும் உண்டு. பஞ்சு மெத்தையில் அலுப்புத் தீர்த்துக்கொண்டு பணப் பந்தலில் பக்குவமாய் வாழும் பெரியப்பா குடும்பத்தில் தப்பி பிறந்துவிட்டார்கள் அக்காள் என்று தான் சொல்லுவேன். தன்னைப் பணக்காரவீட்டுப் பெண் என காட்டிக்கொள்ளவே மாட்டார்கள்- ஏழ்மையைக் கண்டு இரங்கும் எளிய இதயங்கொண்டவர்கள். எங்கள் 'அப்பா' காலமான பின் நானும் எனது தாயாரும் - அண்ணனும் வறுமையால் மிகவும் கஷ்டப்படுவதைப் பார்த்து பாராமுகமாய் இருப்பதோடு மட்டுமா? நகைத்தார்கள் பெரியப்பாவும் – அந்த சின்னம்மாவும்.

பணச் செறுக்கால் ஏழ்மையை எள்ளி நகையாடுபவர் சொந்தக்காரர்களானாலும் சரி! வேறு எவராயினும் சரி! நானொரு மாணவன் என்ற முறையில் கண்டிக்கிறேன். பணம் படைத்தோரை வெறுக்கிறேன். மார்க்ஸ் இசைத்த புரட்சிக் கீதம்—பயங்காட்டும் பூச்சாண்டியின் 'நாடோடிப்' பாடல் என்று எண்ணி மமதை கொண்டிருக்கும் இப்படிப்பட்ட மதோன்மத்தர்களின் மன்மத புரியில் இடிவிழவேண்டுமென்பதே என் ஆசை!

இந்த அபிலாசையை அவர்கள் மனப்பூர்வமாக வரவேற்கிறார்கள். அக்காள் பணக் குட்டையிலே பூத்த மலர். சேற்றிலே முளைத்த செந்தாமரை அதனால்தான் அக்காள்மீது எனக்கு அத்தனை அன்பு கூடப் பிறக்காத ஒரு குறையைத் தவிர மற்றப்படி என்னை உடன் பிறந்த சகோதரனைப் போலவே நேசித்தார்கள்.

இப்படி இருக்கும்போது அக்காள் இட்ட கட்டளையை அலட்சியப் படுத்துவேனு? மறுநாளே பொள்ளாய்ச்சி போய்ச் சேர்ந்தேன்.

வீட்டுக்குள் நுழையும்போது அக்காள் "லேஸ்" பின்னிக் கொண்டிருந்தார்கள். என்னைக் கண்டவுடன் "தம்பி! வா! வா! என்று அன்பாய் வரவேற்ருர்கள். "அக்கா! என் இப்படி இளைத்துப்போனீர்கள்!" என்று கேட்டேன். "எல்லாம் அப்புறம் பேசிக்கொள்வோம்! குளித்துவிட்டுவா சாப்பிட" என்ருர்கள்.

வெந்நீர் போட்டுவைத் திருந்தார்கள், குளித்துவிட்டு சாப்பிட உட்கார்ந்தேன். எனக்கு தேங்காய் பால் சாதம் என்ருல் மிகவும் பிரியம். நான் வருவேன் என்று அக்காள் எனக்கு தயாரித்திருந்த "ஸ்பெஸல்" சாப்பாடு இது. திருப்தியாக சாப்பிட்டேன்.

கைகழுவிவிட்டு முற்றத்தில் வந்து அமர்ந்தேன். அவரைப் பந்தல் பட்டுப்போ யிருந்ததால் முழு நிலா முற்றத்தில் பூரண மான ஒளியை தெளித்தது. மேகத் திரள்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாய் சிதறிக் கிடந்தன. அக்காள் சமையலறையி லிருந்து வர சற்று நேரமாகியது. விரிந்த வானத்தை பார்த்துக்கொண்டே இருந்தேன் நான்.

"வானத்திலே எதை தேடுகிருய் தம்பி?"

"அக்கா! இன்றைக்கு அந்த சந்திரன் எவ்வளவு அழகாய் இருக்கிறது பார்த்தீர்களா?"

"ஆகா! அழகாய் இருக்கிறது. இது காட்டிலே—காய்ந்தால் அங்கே நம்மைப்போல யாராவது இப்படி அனுபவிப்பார்களா?"

"மனித சஞ்சார மில்லாத காட்டில் இந்தச் சந்திரனுக்கு மதிப்பே இல்லை."

"நான் காட்டிலே காயும் நிலாதானே தம்பி"

"அதென்ன அக்கா அப்படிச் சொல்லுகிறீர்கள்?"

"தம்பீ! உனக்கு விளங்க வில்லையா?"

"இன்னும் உங்கள் வாழ்க்கை........."

"புரையோடும் புண்பட்ட என் நெஞ்சைக் கிளராதே! வேறு எதாவது பேசிக்கொண்டிருப்போம்."

என்று சோகம் கலந்த குரலில் சொன்னார்கள். எங்கள் பேச்சின் போக்கு ஆரம்பத்திலேயே இப்படியா போகவேண்டும்? அவர்கள் மனதை புண்படுத்தி விட்டோமே என்று வருந்தினேன்.

அமைதி நிலவ அமர்ந்திருந்தோம் இருவரும், தலையை உயர்த்தி அவர்களைப் பார்த்தேன். அவர்கள் கண்களில் நீர் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. கண்ணீரைக் கொட்டும் அந்தப் பார்வை, பூவும், காயும், கனியும் குலுங்க நிற்கும் தோட்டத்து மாமர மொன்றின் மீது விழுந்திருந்தது. அதன் விளைவுக் கொப்பில் இரு புருக்கள்......! இக்காட்சியை கண் இமைக்காது நீர் படலங்களுக்கிடையே காணுகிறார்கள் அக்காள். கவலையால் என் மனதில் வெடிப்பு ஏற்பட்டது. அவர்களுடைய கவனத்தை என் பக்கம் திருப்ப...“அக்கா! கதை ஒன்று சொல்லட்டுமா?” என்று கேட்டேன். கண்ணீரை துடைத்து விட்டுக்கொண்டு என் பக்கம் திரும்பினார்கள்.

“கலைமணி என்று ஒருவர் கதை எழுதுகிறாரே உனக்கு தெரியுமா ராஜன்?”

“ஆமாம்! நன்றாகத் தெரியும்.”

“தெரியுமா? அவரைப் பார்த்திருக்கிறாயா?”

“அவர் எழுதும் கதையில் தான் அவரை பார்த்திருக்கிறேனே! அக்காள்! அவரை உங்களுககு தெரியுமா?”

“தெரியாது. நானும் அவர்களுடைய கதைகளைத் தான் படித்திருக்கிறேன். அபாரமாய் எழுதுகிறார் இல்லையா? உம்...... அவர் ஒரு கதையில் வேடனும் செல்ல அஞ்சும் வெங்கொடுமைக் காட்டில் வேரிற் பழுத்த பலா வீணாகக் கிடக்கிறதை போல... ...வெறுப்பான வாழ்வில் அவள் சாகாமல் சீந்துவாரற்று வாழ்கிறாள் என்று எழுதியிருந்தார். இந்த உவமானம் என் வாழ்க்கைக்கு பொருந்து மல்லவா?”

“அக்கா! மலைச்சாரலில் வாழ்பவன் புலிக்குப் பயப்படுவானா? அது போல இந்த கதாசிரியர்கள் இருக்கிறார்களே எழுதுவதால் வரும் தீமைப் புலிக்கு பயப்படவே மாட்டார்கள். ஈவிரக்கமில்லாத சண்டாளர்கள். வேதனையை பரப்புவதே அவர்கள் வேலை.”

“திட்டாதே தம்பி! பாவம் அவர்கள் என்ன செய்வார்கள் உலகம் அப்படி இருக்கும்போது......? இன்று நான்......?”

என்ன நினைத்தார்களோ சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டார்கள்.

"இராஜம்! தம்பிக்கு படுக்கையைப் போடு" என்று வேலைக்காரியிடம் சொல்லிவிட்டு......அக்கா எழுந்து சென்றார்கள்.

படுக்கையில் போய் படுத்தேன். அக்காவின் பேச்சிலிருந்து என்னிடம் எதையோ சொல்ல நினைக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டேன். அவர்கள் உள்ளத்தில் ஏதோ மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. அவர்களாய் மனந்திறந்து பேசாவிட்டால் என்னால் அறிந்து கொள்ளக்கூடுமா? பெண்களின் இதய ஆழத்தை அறிய இயலுமா? ஆனால் அக்காள் என்னிடம் ஒளிவு மறைவாக பேசவே மாட்டார்கள். உள்ளொன்று வைத்து புறமொன்று பேசும் குணம் அவர்களிடம் கிடையாது. நாளை தெரிந்துகொண்டு விடலாம் என்ற நிம்மதியோடு தூங்கினேன்.

மறுநாள் மாலை நேரம்! செங்கதிரவன் ஒளிப்பரப்பின் வேகத்தை குறைத்து மேற்கு மலையில் ஒளிந்து கொண்டிருந்தான். மேற்கு வானம் மஞ்சள் மயமாய் மோனத்தில் கிடந்தது.

அக்காளும்-நானும் தோட்டத்தில் அமர்ந்து இயற்கை எழிலைப் பருகிக்கொண்டிருந்தோம் அடிவானத்திற் கப்பால்...இருக்கும்......ஏதோ ஓர் மர்மத்தைக் கண்டு பிடிக்கப்போகும் விஞ்ஞானிபோல வான வளைவை பார்த்துக்கொண்டே இருந்தேன்... மேக மண்டலம் ஒரே நிலையில் இருப்பதில்லை. கணத்துக்குகணம் மாறுதல் ஏற்படு மல்லவா? ஆகாயப் பரப்பில் 'கடவுடா' என்ற ஒரு கனத்த குமுறல் கோடை இடி முழங்கிற்று திடீரென்று! மழை விழுமோ? எழுந்து வீட்டிற்குள் போக எத்தனித்தோம். 'எய்' என்று முழக்கம்! இயற்கை எழுப்பிய முழ கமல்ல. ஆம்! அவர் முழக்கினார் 'எய்' என்று! இருவரும் திரும்பிப் பார்த்தோம்.

புதரிலிருந்து பாய்ந்து வரும் புலிபோல...உடலை முருக்கிக் கொண்டு வந்து நின்றார். அக்காளுடைய கட்டுடல் கூனிக்குறுகிப் போயிற்று.

"உனக்கு எவனாவது கடிதம் போட்டானா?"

"கிடையாதே! ஏன்?"

"கலைமணி என்கிறவன் யார்?"

"எனக்குத் தெரியாது"

" இங்கிருந்து உங்கப்பனை பாக்கப் போனியே அப்போ வழி யிலே எங்காவது இறங்கினியா ?"

" இல்லியே !"

என்று தடுமாறும் குரலில் பதில் அளித்தார்கள் அக்காள். அவருடைய தடித்த குரலில் கோபம் தெறித்து விழுந்தது நெருப் புப் பொறிபோல.

எனக்கொன்றும் விளங்காமல் திகைத்தேன். " வீட்டுக்கு வா உள்ளதை கக்க வைக்கிறேன் " என்று சொல்லிவிட்டு 'உம் நட' என்று துரிதப்படுத்தினர் அவர். சாட்டை அடிக்கு பயந்து சொன்னதெல்லாம் செய்யும் 'சர்க்கஸ்' மிருகம் போல அக்காள் நடந்தார்கள். கால்கள் பின்னின போலும் ! நடையில் நடுக்கமிருந் தது. நானும் கூடவே நடந்து போனேன். என்னிடம் அவர் எதும் பேசவில்லை.

வீட்டுக்குள் நுழைந்தோம் இனி கூண்டில் சிக்கிக்கொண்ட குறும்பாட்டின் கதிதானே அக்காளுக்கு.

கையிலே ஒரு கழியை எடுத்தார் அவர் என் மனம் 'பக் பக்' என்று துடியாய் துடித்தது. ஓர் பலத்த அடி ! கண்ணை மூடிக் கொண்டுதான் அடித்தார். நான் குறுக்கே விழுந்து தடுத்துப் பார்த்தேன் " ராஜன் ! அப்படி தூர விலகிப்போ " என்று உறுமி ஞர். வாலைச் சுழற்றி அடித்துக் கொண்டு 'போர்' புரியும் சிங்கம் போலானுர் அவர். நான் தூரவிலகிக் கொண்டேன். அடியின் தாக்குதலை தாங்கமாட்டாமல் துடித்தார்கள் அக்காள். ஆனுல் வாய்விட்டு அலறவில்லை. ஆவி சோர்ந்து சாய்ந்தார்கள். மெது வாகத் தாங்கிப் பிடித்து படுக்கையில் போட்டேன் நான்.

கை ஓய்ந்துவிட்டதினுலோ அல்லது இனிமேல் உண்மை வெளிவராது என்று முடிவு கண்டதினுலோ அப்படியே போட்டு விட்டு வெளியேறினுர் அவர்.

அவர் போனபிறகு...அனர்த்திக் கொண்டே இருந்தார்கள். கண்கள் நீரைத் தாரையாக பொழியவிட்டுக் கொண்டிருந்தன. அடிவிழுந்த இடமெல்லாம் புடைக்க ஆரம்பித்தன. சுடுசாம்பல்

ஒற்றடம் உடல் பூராவும் கொடுத்தவாறு "அக்காள் இதெல்லாம் என்ன? ஒன்றுமே புரியவில்லை எனக்கு" என்று கேட்டேன்.

"தம்பி......!" என்று அழைத்து பீறிட்டு அழுதார்கள். ஆருத்துயரத்தின் அப்பட்டமான அழுகுரல் அது.

"என்னிடம் சொல்லக் கூடாதா?"

"நான் அடிபட்டுச் சாகத்தான் வேண்டுமா?" நான் துன்பப் படத்தான் பிறந்தேனு? எனக்கு வாழ உரிமை இல்லையா?

"அக்காள்! பூமியில் பிறந்துவிட்ட எவருக்கும் வாழ உரிமை உண்டு! பதட்ட மில்லாமல் சொல்லுங்கள். விஷய மென்ன? ......"

"உன் அக்காள் தவறி விட்டாள்"

"தவறுவது இயல்புதானே அக்கா!"

"பிறகு என் என்னை சித்திரவதை செய்கிறூர்?"

"விஷயத்தை பூராவும் சொல்லுங்கள்"

"ஆசைக் கனவுகள் அத்தனையும் அழியும் நேரம்—எவ்வளவோ முயன்றும் இன்பக்கரை கிட்டாமற் போன வேளை—தற்கொலையைத் தவிர வேறு வழியே இல்லை என்று முடிவு செய்து கொண்ட சமயம் போகும் வழியில் நடக்காதது நடந்து விட்டது. கறைபட்ட என் வாழ்வில் கலைமணி என்பவர் குறுக்கிட்டு விட்டார். ஆம்! தம்பி! தெளிவாக வெட்கத்தை விட்டு சொல்வதனுல் அவர் என் இதய பீடத்திலே இடம் பெற்றூர்.

ஆனுல் நான் குற்றவாளி யல்ல தம்பி! என்னை—உன் அக்காளை விபச்சாரி என்று வேண்டுமானுலும் சொல்லி விட்டுப் போ ......நீ கல்லூரி மாணவன்—படித்தவன். யோசித்துப் பார் கொஞ்சம். யார் மீது குற்றம்? என் வாழ்க்கை பூராவும் உனக்குத் தெரியும். நீயும் உலுத்தர் நிறைந்த உலகத்தைச் சேர்ந்தவனுகி விடாதே தம்பி!"

"அக்கா! என்னை அப்படி நினைக்காதீர்கள். உங்கள் மாசு மறுவற்ற மனதைப் பற்றி எனக்கு நன்ருகத் தெரியும். உங்கள் வாழ்வுக்காக நான் என்றைக்கும் போராடுவேன்."

ஆறுதல் அளித்தேன் அடிபட்ட வேதனையும்—அடங்காத குமுறலும்—அக்காளை அடிக்கடி முணுமுணுக்கச் செய்தன. இரவுப் பொழுதை சோகப் படலத்துக்கிடையே கழித்தேன்.

காலையில் ஊருக்குப் புறப்படும்போது அவரிடம் சென்று "போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டு விடை பெற்றேன். அவர் ஏதும் கேட்க வில்லை. தலையை மட்டும் 'போய்வா' என அசைத்துக் காட்டினர். அக்காளிடம் கோபித்துக் கொண்டுதான் புறப்படுகிறேன் என்று நினைத்திருப்பார் அவர்.

கோடை விடுமுறை பூராவும் அக்காளோடு ஆனந்தமாய் கழித்துவிட எண்ணி பொள்ளாச்சி போன என்னை அந்த 'உக்கிரப் போர்' இரண்டு நாளிலேயே துரத்தி விட்டது. நேரே கலைமணி யைக் கண்டேன். சுமார் இருபத்து ஐந்து வயது இருக்கும் அவ ருக்கு. வாலிபத்தின் பூரணப் பொலிவு அவருடைய உடலில் விளையாடியது. குறுகுறுத்த கண்களும்—அந்த அழகான முக வெட்டும்—எந்தப் பெண்ணையும் திகைத்து நிற்க செய்து விடும். அவர் பேச்சில் 'லயம்' இருந்தது. நாசுக்காய் பேசுகிருர். பொறுமை அவரிடம் பெருமை பெறுகிறது. எதையும் ஆர அமர பேசும் காரிய சித்திக்காரர் என்று சுலபமாக தெரிந்து கொண்டேன்.

சில மணி நேரங்கள்தான் அவரிடம் பேச்சு வார்த்தை நடத் தினேன். முதலில் அவரை ஆத்திரம் பொங்கத் திட்டினேன். அவருடைய செல்வாக்கின் மூலம் என்னை அவர் என்ன வேண்டு மானுலும் செய்யும் சக்தி உடையவர்தான். ஆனல் அமைதியாகவே கதையைக் கேட்டுக் கொண்டு வந்தார். நடந்துகொள்ளும் மாதிரியி லிருந்து அவர் ஒரு புது உலக மனிதர் எனக் கண்டேன். ஆனல் அக்காள் 'வேறொருவருக்கு விலைபோன சரக்கு' என்று நான் சொன்ன வுடன்.........?

—

நல்லது கெட்டது இவை இரண்டும்
ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள்.
—விவேகானந்தர்

## கலைமணி

வேறொருவருக்கு விலைபோன சரக்கு என்று இராஜன் சொன்ன வுடன் நல்லபாம்பு கொட்டியதுபோல நான் அதிர்ந்து போனேன். கூர்மையான கத்தியை என் ஹிருதயத்திலே சொருகி இருந்தால்கூட அந்த வேதனையை தாங்கிக் கொள்வேன், இந்த சொல்லம்பு என் இதயத்தை இருகூறாகப் பிளந்து விட்டது.

இராஜன் வந்தார். "கமலாவை உங்களுக்கு தெரியுமா?" எனக் கேட்டார். "தெரியும்" என்றேன், என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தார். "கடிதம் கொண்டுவரும் இராஜன்—என் தம்பி. அவன் எல்லா விபாமும் கூறுவான்" எனக் கண்டிருந்தது.

பொள்ளாச்சியில் நடந்த நாடகத்தை விபரமாக எடுத்துக் கூறினார் இராஜன். அத்தோடு நிற்க வில்லை.

"பகுத்தறிவு பேசுகிறீர்கள். உலகுக்கு உபதேசம் செய்கிறீர்கள். கதைகள் தீட்டி களங்கம் போக்குவதாக கூக்குரலிடுகிறீர்கள். சிந்தனையாளராகத் தெரிகிறது உங்களைப் பார்த்தால், இப்படி ஒரு பெண்ணின் வாழ்வை பொசுக்கி விட்டீர்களே! இது தான் பொது நலச் சேவையா? பாவையருக்கு பரிந்து பேசுவது போல பாவனை செய்து பெண் வேட்டையாடித் திரிவது விவேகமா?"

"இராஜன்! ஆத்திரப்பட வேண்டாம். நான் செய்த தவறைச் சொன்னால்........."

"நீங்கள் செய்த தவறு......மாற்றானுக்குச் சொந்தமான பொருளைத் திருடியது!"

"திருட வில்லை இராஜன்! மாற்றான் வீட்டுத் தோட்ட மலர் ......என் வீட்டு முற்றத்தில் மணம் பரப்பினால் ...... அதை நுகரக் கூடாதா? குற்றம் என்னுடையதா? அல்லது மணத்தை இழுத்து வந்து என்மீது மோதச் செய்த தென்றலுடையதா? மேலும் கமலா மாற்றானின் மாணிக்கம் என்று தெரியாது எனக்கு."

"தனக்குத் திருமணமாகி விட்டது என்று உங்களிடம் சொன்னார்களாமே."

என் சிந்தனை விரைந்து சுழன்றது!

ஆம்! உண்மைதான். சொன்னதாக நினைவிருக்கிறது. கட்டிலில் படுத்திருக்கும்போது "நான் கல்யாணமானவளாக இருந்தால்........." என்று கூறினாள் கமலா. ஆனால் உள்ளத்தைக் கிளறி ஊடல் பேசுகிறாள்—பெண்மை பிணங்குகிறது என்று எண்ணி விட்டேன் அப்போது. கொஞ்சுமொழி ஊடாடும் விளையாட்டின்போது பெண்மை என்ன வெல்லாமோ பேசும். பிகு பண்ணும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். தனக்கு திருமணமாகி விட்டது என்று சொல்லி சிணுங்குவதாக—வேடிக்கை பேசுவதாக நினைத்து விட்டேன். மேலும் அந்நேரத்தில் நாங்கள் இருந்த நிலையில்......வாய்கள் பேசிற்றே தவிர ....பேச்சின் பொருள் மனத்தில் பதிய முடியாத இன்பநிலை! ஏதேதோ பேசினோம். ஒன்றுகூட நினைவில் பதிய வில்லை. இதைக்கூட இராஜன் நினைவுறுத்தியதால் தான் மீண்டும் ஞாபகத்திற்குக் கொண்டு வர முடிந்தது.

ஊடலின்போது பேசியதாலும்—உடல் உணர்ச்சியின் உச்சியில் நிற்கும் சமயம் சொன்னதாலும் இச்செய்தி என் மனத்தில் படிய வில்லை.

கமலாவின் கட்டுடல் என் கையிலேதான் கிடந்தது. அங்கம் பூராவும் அலசிக் கொண்டு இருந்தேன். எனக்கும் கமலாவுக்கும் பொருத்தம் கிடையாது—சேரத் தகாதவர்கள் என்ற தடை விதிக்கும் சக்தியுடைய அந்தத் தாலியாவது என் கண்ணிலே பட்டிருக்கக் கூடாதா? அத்தாலி என் பார்வையிலே பட்டிருக்குமானல்—அவள் ஊடலின்போது கூறியதை நம்பியு மிருப்பேன். என் மனமும் வேறு திசையை நோக்கி சென்றிருக்கக் கூடும்.

ஆனல் இப்பொழுது.....எனக்கும்—கமலாவுக்கும் இடையே வாஞ்சை வச்சிரம்போல ஒட்டிக்கொண் டிருக்கிறது. சாகாத சிந்தனை—போகாத ஜீவன்—சிரஞ்சீவி பெற்ற பின்னர், இனி மனதைக் குழப்பிக் கொள்வதால் தளர்ச்சி தோன்றுமே யன்றி தாகம் தீரப் போவ தில்லை.

இராஜன் அன்று இரவே திருச்சி போக வேண்டு மென்றார்—அவரை திருச்சிக்கு அனுப்பி வைத்தேன். "எங்கள் தொடர்பு தவறானதுதான் எனச் சாதிப்பதானல் என்னை மன்னித்து விடுங்கள். தவறுதானு என்ற சந்தேகம் தீராமல் இருக்குமானல்

விளக்கம் தருகிறேன். கமலா என்னால் கெடுக்கப் பட்டாள் என்ற குற்றத்தை சாட்டி துரத்தி விடுவதானால் நான் மனப் பூர்வ மாக ஏற்றுக் கொள்கிறேன்'' இதுதான் இராஜனிடம் நான் கடைசியாக கூறியது.

இப்பொழுதெல்லாம் என் மனம் பெரிதும் தனிமையை நாடு கிறது.

ஏகாந்தமாய் இருக்கிற நேரங்களில் நான் செய்தது தவரு? என்று என்னை நானே அடிக்கடி கேட்டுக் கொள்வேன். மனச் சாட்சிக்கு கட்டுப்பட்டு நடக்கப் பழகிக் கொண்டிருக்கும் நான் நன்ருகச் சிந்தித்துப் பார்க்காமல் இருப்பேனு?

'பிறர் மனை கெடுத்த பேயன்' என்று உலகம் என்னைத் தூற்றலாம். தூற்றுவதும் போற்றுவதும் உலகத்தின் நிரந்தர நிலை யல்ல. இன்று போற்றப்படும் பொருள் நாளை தூற்றப் படலாம்- ஆனல் நான் தூற்றுதலுக் குரியவன்தானு? அவளை நான் மறந்துவிட வேண்டியவன்தான்! ஆனல்.........

"கலைமணிதான் என் உரிமைப் **பொருள்**'' என்கிருள் கமலா.

"முதல் இரவு தந்த கமலா என் **துணைவி**'' என்கிறேன் நான்.

இது ஒட்டும் இரண்டு உள்ளங்களின் சேர்க்கையிலே பிறக் கும் கூக்குரல்.

நானெரு எழுத்தாளன். உலகைத் தெரிந்து கொண்டவன். இந்துமதச் சட்டம் தெரிந்தவன். சீர் கெட்ட சமுதாயத்தின் சேற்றுப் பாதையை பார்த்தவன். நான் சிந்திக்காமல் முடிவு செய்ய வில்லை. என் வாழ்க்கையை அமைக்க எனக்கு அக்கரை இருக்காதா? கெட்டுப் போக வேண்டும்—அயோக்கியன் என உலகில் பெயர் எடுக்க வேண்டும்—என்று எவனவது எண்ணு வானு? நான் எதையும் துருவித் துருவி நோக்குபவன். கமலா வைப் பற்றி உற்று நோக்கி யிருக்கிறேன். மேனியை மட்டு மல்ல உள்ளத்தின் ஆழத்தை.

அவள் பரவச மூட்டும் பாடல். ஆனல், ஏட்டிலே பாட்டு எழுதப் பட்டிருப்பதால் பயன்? அந்தப் பண் அமைக்காத பாட லுக்கு இசை அமைத்தவன் நானே!

என்னை நம்பி விட்ட ஒரு ஜீவனை நிராகரிக்க நான் தயாராக இல்லை.

"ஆசை அறுபது நாள்—மோகம் முப்பது நாள். போகப் போக எல்லாம் கசந்து விடும் சார்! கமலா நல்ல அழகியாக இருந்திருப்பாள். அதனால்தான் கலைமணிக்கு இந்தக் கிறுக்கு.

என்று சில பட்டினத்தடிகள் பகரலாம். அவர்களுக்கு நான் கூறுவது இதுதான். அழகின் அடிப்படையில் அவதரிக்கும் ஆசை அரை நொடியில் அகால மரணம் அடைந்துவிடும் என்பதை நன்கு அறிவேன். நான் அவளுடைய மயக்கு அழகிலே முதலில் மயங்கினேன் என்றாலும் மதுரை நிகழ்ச்சியில் புறத்தை மட்டுமா அவளுடைய அகத்தின் தூய்மையையும் தெளிவாக தெரிந்து கொண்டேன். அவள் என் வாழ்விலோர் அஜந்தா!

நீர் வீழ்ச்சி பாய்கின்ற வேகத்தைப் பார்த்தால் பயங்கர மாகத்தான் இருக்கிறது. ஆனால் நீராட நினைப்பவன் நீர் வீழ்ச்சி யிலே தலையை நீட்டப் பயந்தால் முடியுமா? அதுபோல.........

கமலாவை நான் அடைவது ஆபத்தோடு விளையாடுவது மாதிரிதான். இன்பத்தை ஏற்க எவ்வளவு துடிதுடிப்பு இருந் ததோ அதே துடிப்பு துன்பத்தை ஏற்கும்போதும் விரைந்தே செல்லும்!

இன்றோடு கமலாவும் நானும் மதுரையில் சந்தித்து ஒரு மாத மாகிறது!

கமலாவும் வேதனையால் வாடிக் கிடக்கிறாள் என்பதை இப் பொழுது வந்த அவளுடைய கடிதத்தில் கண்டேன்.

அன்பரே!

கடந்த ஒரு மாத காலமாக கடிதம் எழுத முடியாது போனதற்கு மன்னிக்கவும். இங்கு வீசிய புயல் அடங்கியபா டில்லை. என்னால் இனி இங்கு இருக்கவும் முடியாது. 'வாத்தி யாரம்மா' வேலையையும் ராஜிநாமாச் செய்து விட்டேன். அவர் இன்னும்பதினைந்து தினங்களில் வெளியூர் போகிறார். நான் அங்கே வந்துவிடப் போகிறேன். எல்லா ஏற்பாடும் செய்து வையுங்கள். தங்கள் விரிந்த மார்பைத் தேடி வருகிறேன்.

இப்படிக்கு,

தாமரை.

என் கமலா வரப் போகிறாள். என் கிளைக்காக பறந்து வரு கிறது கிளி. ஆசைக் கனல் பெருக்கி அன்பு சிறகசைத்து சொக்கு முகங் காட்ட வரும் அவளைக் கட்டி அணைத்துக்கொள்ள அட்டி யில்லை. ஆனால்......

கோணற் சமூகத்தின் கொக்கரிப்பும் — கொல்லும் மூட வழக்கத்தின் கோபமும்—நேர்மையிலாச் சாத்திர சம்பிரதாயத் தின் சீற்றமும்—எங்களைச் சுட்டெரித்து விடாதா? ஆம்! குள் ளச் சமூகத்தின் கண்ணெதிரே இந்த வட்டாரத்திலேயே வாழக் கூடாது.

எங்காவது ஓடி விடலாம். அப்படியே ஓடி ஒளிந்தாலும் இந்த உலகத்திற்குள்தானே!

ஆம்! ஏன் பயப்பட வேண்டும்? வாழ்க்கை வாழ்வதற்கே என்ற திடமான எண்ணம் இருக்கும்போது ஏன் பயம்!

இருவரும் சென்னையிலே துவக்குவோம் வாழ்வை என்று முடிவுக்கு வந்தேன் கடைசியாக. * * *

ஒரு நாள் வெளியூர் போய்விட்டுத் திரும்பினேன். இரவு பூராவும் தூக்கமில்லாததால் வீட்டிற்குப் போன உடனே படுக்க வேண்டு மென்று நினைத்தேன். படுக்கையை எடுத்து விரித் தேன். ஏதாவது கடிதம் வந்திருக்கிறதா என்று மேஜை மீது கிடந்த கடிதங்களைப் புரட்டினேன். ஒரு தந்தி வந்து கிடந்தது.

என் தூக்கம் பறந்து விட்டது. கோட்டையைப் பிடிக்கப் போகும் வீரனின் எண்ணமே தலை தூக்கிற்று. அவசர அவசர மாக ஆடைகளை அணிந்துகொண்டு முனிசிபல் சத்திரத்தை நோக்கி ஓடினேன். அங்கே.........

ஆம்! அப்பொழுதுதான் கமலா தூங்கி எழுந்து கொண் டிருந்தாள்.

"கலைமணி!" என்ற வார்த்தை துள்ளி வந்தது!

"கமலா!" என்றேன் நான். ஒரு விநாடி! ஓடி வந்து என்னைக் கட்டிக் கொண்டாள். வேடனின் கொடு வேலுக்குப் பயந்து அடைக்கலம் புகுந்த மடமான்போல என் முகத்தை ஏதோ ஒரு விதமான அர்த்த புஷ்டியோடு பார்த்தாள். 'அடைக் கலம் கிடைக்குமா?' என்று கேட்ட மாதிரி இருந்தது அப்பார்வை. ஒரு மாத காலத்தில் அவள் எவ்வளவோ மாறிப்போ யிருந்தாள். சரீரம் மெலிந்துபோ யிருந்தது. நலிந்துபோன தன் வாழ்வை பிரதி பலித்தது அந்தப் பார்வை! சோகத்தின் மெல்லிய நரம்புகள்.

அந்தக் கவர்ச்சிக் கண்களில் தளர்ச்சியை காட்டின.

நானும் கட்டிப் பிடித்துக் கொண்டு கமலாவை ஆரத் தழுவி னேன். அன்னையின் அரவணைப்புக் கிடைத்த வுடன் குழந்தை

ஆறுதல் பெரு மூச்சு விடுவது போல் என் அரவணைப்பால் பெரு மூச் செறிந்தாள் கமலா.

அகற்ற முடியாத ஆலிங்கனம்!

விலக்க முடியாத இந்த அன்பு அணைப்பை வெட்டிப் பிரிக்க நினைக்கின்ற வீணர் கூட்டத்தை என்ன சொல்லுவேன்?

அவளோடுகூட ஒரு பெண்மணி வந்திருந்தாள். அவள் யார்? என் கேள்வியைக் கண்ணால் கேட்டேன். "எங்கள் வீட்டு பணிப் பெண்" என்றாள் கமலா!

"எப்படித் தப்பி வந்தாய்?"

"கைதிக்குக் கவனம் சிறைக் கதவுமீது தானே!"

"பலே கெட்டிக்காரி நீ! கமலா! இங்கே இருப்பதைவிட மதுரைக்கு போய் விடுவது மேல். எல்லாம் அங்கே பேசிக் கொள்ளலாம்! என்ன போகலாமா? இப்பொழுது சரியான நேரம். வண்டி கிடைக்கும்."

'ஆகா' என்றாள் கமலா, இனிக்கும் தொனியில்!

மூவரும் மதுரை வந்தோம். அன்று தங்கினோமே அதே சத்திரத்தில் ஆனால் வேறொரு அறையில் தங்கினோம்.

மாலைக் கதிரவனின் சாயல் அறையினுள் படர ஆரம்பித்தது. அந்த மெத்தைக் கட்டிலில் அமர்ந்திருந்தோம் நானும் கமலாவும். வேலைக்காரி இராஜம் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள்—எங்களைப் பார்ப்பதும் பிறகு தலையைக் குனிந்த வண்ணம் தரையை நகத்தால் கீறிக் கொண்டுமிருந்தாள் அவள்!

கமலா தனது வளித முகத்தை என் தோளில் ஊன்றியிருந்தாள். இரண்டு துளிகள் வடிந்து என் சட்டையில் விழுந்து நெஞ்சுக்குள்ளே செல்லப் பார்த்தன. வெந்நீர் போல சூடு! என் கண்களும் நீரைக் கொட்டின. ஒரு ஆண் மகன் கண்ணீர் வடிக்கலாமா? வீரமற்ற கோழையா? ஆம்! அழக் கூடாது தான்......அதுவும் ஒரு பெண்ணின் முன்னிலையில் கண்ணீர் வடிப்ப தென்றால் கேவலம்தான். ஆனால்......அதோ என் கண்ணில் பட்டு விட்டதே அது! எது? எனக்கும் அவளுக்குமிடையே பிளவை உண்டு பண்ணும் அந்தப் பொல்லாத சங்கிலி —அவர் கட்டிய சத்தியக் கயிறு! மீண்டும் சில துளிகள் சிதறி விழுந்தன! அவள் என்னைப் பார்த்தாள். நான் அந்த தாலிக் கயிறைப் பார்த்துக் கொண் டிருந்தேன்.

# கமலா

இதனந்தான் பெண்ணோடு விவாதம் செய்கிறது—அறிவல்ல.
—மாத்யூ அர்னல்ட்

தாலிக் கயிற்றையே பார்த்துக் கொண்டிருந்தார் கலைமணி கண்ணீர் ஒழுக.

என் மார்பகத்தைப் பார்ப்பதும்—தலையை கவிழ்த்திக் கொள்வதும்—கண்ணீர் உகுப்பதுமாக அவர் நடந்துகொண்ட இச் செயல் நெருப்பு பந்தமொன்றை என் நெஞ்சில் வைப்பதும்—எடுப்பதுமாக என்னைச் சுட்டெரிப்பது போல பட்டது எனக்கு. துயரத்தின் எல்லையை நான் தொட்டு விட்டேன். என்னால் சகிக்க முடியாது இனி!

அந்த பாசக் கயிற்றை—தாலியை — கழற்றினேன். கலைமணியின் காலடியில் வைத்தேன். அப்பொழுதே என் வாழ்க்கையை அவருடைய அன்புக் காலடியில் காணிக்கையாக சமர்ப்பித்து விட்டேன். வாய்விட்டு அலரு விட்டால் என் இதயம் வெடித்து விடுமோ! 'அன்பே' என்று கதறினேன். என் அழுகை உரத்த தொனியில் போய்க் கொண்டிருந்தது. ஆனால் அவர்...

கை விரல்கள் நடுநடுங்க மெதுவாக தாலியை எடுத்தார். என் கழுத்தருகில் அவர் கரங்கள்—அந்தத் தாலி நெருங்கி வந்தன. ஆம்! வானத்தைப் பார்த்து வயிற்றைப் பிசையும் குடியானவன் நிலத்தில் மழை கொட்டப் போகிறது! என் கழுத்திலே அந்தத் தாலியைப் போட்டு விட்டார். ஆகா! துன்பத்தின் எல்லைக்கு அப்பாலே இன்பத்தின் வருகையைக் கண்டேன். அப்படியே விம்மும் இதயத்தை அவருடைய மாசற்ற மார்பகத்திலே ஒற்றிக் கொண்டேன். அவரது கைகள் என் முதுகை தடவிக் கொடுத்தன. எவ்வளவு ஆறுதல்! அடேயப்பா! இந்த ஒரு இதய சுகத்துக்காக எத்தனை காலம் நான் தவம் இயற்றினேன்.

"இதயமதில் உதய சுகம்.........சொல்லுவாய் நீ வான்மதி" என்ற லைலாமஜ்னுவின் கீதம் காற்றலையிலே மிதந்து வந்தது. இருள் உலகைக் கவ்வும் நேரம்! இராஜம் எழுந்து மின்சார 'ஸ்விட்சை'ப் போட்டு அறையை ஒளி மயமாக்கினாள். என் இதயமதில் உதய சுகத்தை ஒளி மயமாக்கினார் அவர்—கலைமணி!

கைக் குட்டையால் அவர் முகத்தில் ஏற்பட்டிருந்த கண்ணீர் வடுக்களை போக்கினேன்.

"இராஜம்! பர்ஸிலே பண மிருக்கிறது. எடுத்துக் கொண்டு போய் 'டிபன்' வாங்கிக் கொண்டு வா" என்று சொன்னேன். அவளும் பணத்தை எடுத்துக் கொண்டு சென்றாள். இராஜம் இங்கு நடந்ததை யெல்லாம் பார்த்துக் கொண்டுதானே இருந் திருப்பாள்.

கொக்கரிக்கும் சமூகத்தையே நாங்கள் இலட்சியம் பண்ண வில்லையே! இராஜம் எதிரே இருந்தால் எங்களுக்கு என்ன?

இராஜம் பலகாரம் வாங்கிக் கொண்டு வந்தாள். அவளுக் கொரு பொட்டலத்தைக் கொடுத்துவிட்டு அவர் முன்னிலையில் வைத்தேன். அவர் பொட்டலத்தைத் தொட வில்லை. அவருடைய செயலற்ற மௌனத்தின் காரணத்தை அறிய முடியுமா? ஏனோ பேசாப் பொற் சிலையா யிருந்தார். பொட்டலத்தை அவிழ்த் தேன். அதிலே ஐந்தாறு பஜ்ஜிகள்......!

ஒன்றை எடுத்து புட்டுப்புட்டு அவர் வாயில் கொடுத்தேன். வாழைக்காய் பஜ்ஜியி லிருந்த ஓரத்து தோலைக் கூட பிய்த்து விட்டு நாசுக்காய்—நயமாய் ஊட்டினேன் அவருக்கு.

அறைக் கதவைத் தாளிட்டேன். அவருடைய கை என் தோளின் மேல் வந்தது. அரை நிமிட நேரம்......பிறகு...... என்னை நெருக்கி இழுத்தார். என்னை அறியாமலே என் இரு கைகளும் அவர் கைகளைப் பற்றி என் மார்புடன் சேர்த்து அழுத் திக் கொண்டேன்.

இன்ப நீரோடையில் நெளிந்து நெளிந்து நீந்தினேன். என் பெண்மை பூத்தது.

இனி அடுத்த புரோகிரும்......என் அதைப் பற்றி ஒன் றுமே பேசாமல் இருக்கிறார் அவர். எப்படியோ வீட்டி லிருந்து தப்பி விட்டேன். அவர்—என் கணவர் என்று சமூகம் சொல்லு கிறதே, அந்த முத்தண்ணு வெளியூர் சென்றதால்தான் என்னல் தப்பிவர முடிந்தது. இல்லாவிடில் கருட பார்வையி லிருந்து தப்ப முடியுமா இந்த எலியால்? ஆனல்......நான் வந்து ஒரு நாளாகியும் கலைமணி என் மௌனம் சாதிக்கிறார். என் மனத் தின் அடித்தளத்தில் குமுறல் ஏற்பட்டது. என்? என்? என்ற இந்த ஒரே கேள்வி என் இதயக் கனலை எழுப்பி ஓங்கார மிட்டது.

அடுத்தவரின் சொத்தை அபகரிப்பது அநியாய மாச்சே என்று நினைக்கிறாரா? கலியாணமான பெண்ணைக் கூட்டிக் கொண்டு ஓடினால் கேவலமாக உலகில் பேசுவார்களே என்று கருதுகிறாரா? என்னை ஏற்றுக் கொண்டால் எதிரிகளின் எதிர்ப்பு அதிகரிக்குமே என ஆவி சோர்ந்து போகிறாரா?

அவருடைய சோக ரேகை படர்ந்த முகம்—ஆழ்ந்த மௌனம் இப்படியெல்லாம் என்னை சந்தேகங் கொள்ளச் செய்தன.

அப்படியானால் இவரே கதியென சொத்து—சுற்றம்—பெற்றோர் அத்தனையும் வெறுத்து, வரக் கூடிய கேவலத்தையும் பொருட்படுத்தாது தஞ்சம் புகுந்த என்னைப் புறக் கணித்து விடுவாரா? மௌனத்தால் தன் கருத்தை தெரிவிக்கிறாரா?

என் வாழ்வு புயலில் சிக்கிய துரும்புதானா?

நான் என்ன செய்வேன்? எங்கே போவேன்? தஞ்சம் புகுந்த இடத்திலுமா சஞ்சலம்? நெஞ்சம் வேகுதே! எனக்கு ஏற்பட்டு விட்ட இந்தக் குறைக்கு நானா பொறுப்பாளி? கன்னிப் பெண்ணாக இருக்கும்போது கலைமணி என் வாழ்வில் குறுக்கிட் டிருந்தால் கட்டாயம் இன்று என் கணவனாகத்தானே இருப்பார். ஆனால்.........

முத்தண்ணாவை நான் மன மொப்பி மணந்து கொண்டேனா? பால்யத்திலேயே அவரை அடியோடு வெறுத்து வந்திருக்கிறேன். அப்படி யிருந்தும் பலாத்காரமாக என்னை—அவருக்கு மணம் முடித்து விட்டார்கள் என்றால் இதற்கு நான் குற்றவாளியா? சிறைக்குள்ளே யிருக்கும் கைதியை துப்பாக்கி முனையில் மடக்கி விடுவது கடினமா? என்னால் வெறுத்து ஒதுக்கப்பட்டவரே எனக்கு மணவாளரானார். கருத்தோடு நான் கழுத்தைக் கொடுக்க வில்லை. கட்டாயத்தின் பேரில் கொடுக்க வேண்டிய நிலை...பற்றுக்கோல் கிடைக்காத பொல்லாத காலம். நான் முத்தண்ணாவின் மனைவி ஆனேன்.

எனக்கு "முதல் இரவு" தந்தார்கள். எனினும் மனதில் அமைதி யில்லை. மூலையில் உட்கார்ந்து அழுது கொண் டிருந்தேன். அதன் பிறகு முத்தண்ணா அறையினுள் தள்ளப் பட்டார். அவர் முகத்தைப் பார்க்கவோ—அவருடன் பேசவோ மனம் இசைய வில்லை. அவர் வருகை "வில்லன்" வருவதுபோல

எனக்கு வெறுப்பை கொடுத்தது. அவர் வந்து மெதுவாக என் கையைப் பற்றி இழுத்தார். "சீ" என்று சொல்லி எப்படியோ என்னை விடுவித்துக் கொண்டேன். என் மனத்தில் புயலின் வேகம் அலைக் கழித்தது. ஆனால் என் கணவர் எனக்கு "ஹார்பர்" அல்ல நான் புகலிடம் பெற! "சீ" என்ற வார்த்தை அவருக்கு சுருக் கென்று தைத்து விட்டது போலும்! அந்த அலங்காரக் கட்டி வில் அப்படியே படுத்து விட்டார். இது அப்போது எனக்கு ஒரு நிம்மதி யளித்தது. "இனிமேல் நீ வாழாவெட்டிதான். உன் மமதையால் மடியப் போகிறாய்" என்று வஞ்சம் தீர்க்கும் தோரணையில் முணு முணுத்தார். 'அப்பா! அந்த மட்டுக்கும் ஓர் வித விடுதலை அளித்தாரே! இதுவே எனக்கு போதும்! ஆனால்...... காலம் என்னை சோதித்தது. முத்தண்ணு—என் கணவர் பட்டாளத்தில் போய் சேர்ந்து விட்டார். ஆம்! என்னை வாழாவெட்டியாக்க வேண்டாமா? காலம் போருக்கு அறைகூவி அழைத்தது என்னை.

ஒரு வருடம் உருண்டு விட்டது. எப்படியோ கழித்து விட்டேன் காலத்தை. முத்தண்ணு 'டிஸ்' சார்ஜ் ஆகி வீடு வந்து சேர்ந்தார். எங்களுக்குள் சரியான பேச்சு வார்த்தை இல்லையாம். இதை பிரமாதமாக துப்பறிந்து விட்டதாம் சமூகம். தனிக் குடித்தனமாக வாழ்ந்தால் ஒரு வேளை சௌஜன்யமாக இருப்போமாம். அதற்காக......இருவரும் பொள்ளாச்சிக்கு அனுப்பப் பட்டோம். அவருக்கு வேலை எதும் கிடைக்க வில்லை. நான் உபாத்தியாயினி உத்தியோகம் பார்த்து சம்பாதித்துப் போட்டேன். இந்த இயந்திர வாழ்விலாவது நிம்மதி கிடைத்ததா எனக்கு! என் செவ்விதழ் கூட்டமுதம் கேட்கிறது. இது காலத்தின் கூத்தா? சீரான குடும்பத்தில் பிறந்து செல்வத்திலே சொகுசாக வளர்ந்த நான் சிக்கலில் மாட்டிக் கொண்டு படாத பாடு பட்டேன். எடுத்ததற் கெல்லாம் சந்தேகப் படுவார். அர்த்த மில்லாமல் தன் சந்தேகப் பார்வையை வீசிக் கொண்டே இருப்பார். அவர் நினைத் திருந்தால் ஒரு பெண்ணின் அபிலாஷையை பூர்த்தி செய்திருக்க முடியாதா? அவர்தான் சபதத்தை நிறைவேற்றுகிறாரே? என் நிலைமையை நினைக்கும் சமயமெல்லாம் மங்கம்மா சபதம் சினிமாப் படமே என் கவனத்திற்கு வரும். ஒரே வீட்டில் இருவரும் தம்பதிகளாக வாழ்கிறோம். உலகம் எண்ணுகிறது நாங்கள் நல்வாழ்வு நடத்துகிறோம் என்று. ஆனால் நான்—பருவத்தூண்டுதலால்—உணர்ச்சிப் பெருக்கால்—

எண்ணாத எண்ண மெல்லாம் எண்ணி இன்னலால் அணு அணு வாய்ச் சாகிறேன் என்று தெரியுமா?

அவர் என் கணவர். ஊரிலுள்ள வீடுகளின் படிக்கட்டுகளை கணக்கு எடுத்துத் திரிகிறார். சிக்கும் சுந்தரிக ளெல்லாம் அவருக்குச் சொந்தம். ஒவ்வொரு மலராக சுவைத்துத் தேன் பருகித் திரிவதே அவருடைய தினசரித் தொழில்.

நான் விரக தாபத்தால் வாடிக் கிடப்பதைக் கண்டு என் கணவரே கவலைப் படாதபோது இந்த வையகம் என்னைப் பற்றி வருத்தப் படுமா?

எனக்கு மாங்கலியம் இருக்கிறது. ஆனால் நான் விதவை. விதவைக்கும் எனக்கும் கொஞ்சங்கூட வித்தியாசம் கிடையாது! வீட்டில் அலங்காரமாக தொங்க விடப்பட் டிருக்கிறதே பாரிஸ் அழகி படம். அது மேல்படியும் தூசியை திடைத்து விடுவார்கள். அதுவும் நானும் ஒன்றுதான்.

ஆனால், உயிருள்ள ஒரு பெண்ணின் உள்ளத்தை சுத்தப் படுத்த மாத்திரம் உரிமை கொடுப்ப தில்லை. லாயத்திலே கட்டியிருக்கும் குதிரைக்கு குஷி வந்தால் கனைக்க—எச்சிலை பொறுக்கி வயிறு நிரப்பும் நாய்க்குக் குரைக்க உரிமை உண்டு. ஆனால் பெண்ணாகப் பிறந்த புண் ஜென்மத்திற்கு வாழக்கூட உரிமை கிடையாது. என்னைப் போல திருப்தியற்ற வாழ்வில் எத்தனை பெண்கள் இப்படி விரக்தியோடு வாழ்கிறார்களோ? சுடரற்ற விளக்கு—சோறில்லாத வெறும் பானை—மணம் வீசா மலர்—குளிர் நீரில்லாக் குளம் இருந்து யாருக்கு என்ன பயன்? வாழ்வின்றி வனிதையாக—அழகியாக வாழ்ந்து எதற்கு?

இப்படி நான் மட்டிலும் நினைப்பதால் எவருக்கு என்ன லாபம்! என் கொந்தளிப்பு குட்டிச் சுவர் கோட்பாட்டைக் குப்புற வீழ்த்தி விடப் போகிறதா என்ன?

நான் ஒருத்திதான் இப்படி வெறுப்பான வாழ்வில் கசப்பான கணவனுடன் கவலையோடு காலங் கழிக்கிறேன் என்று கருதி விட வேண்டாம். எத்தனையோ மலர்கள் பூக்காமல் மொக்குப் பருவத்திலேயே மக்கிக் கிடக்கின்றன. என் என்று யாராவது கேட்கிறார்களா? கண்டதே காட்சி—கொண்டதே கொள்கை என்ற விடாப் பிடியோடு சமுதாயம் உருளுகிறது. ஆனால்......பெண்மையின் உரிமைக் குரல் சாதாரணமான தல்ல.

நான் என் இப்படியெல்லாம் நினைக்க வேண்டும்? பசியோடு இருப்பவனுக் கல்லவா வயிற்றைக் கவ்வும் பசியின் கொடுமை தெரியும்! புள்ளிமானுக்குத்தானே புலியின் பயங்கரப் பற்களின் கூர்மை தெரியும்! எனக்கு இருக்கும் இயற்கைப் பசியைப் பற்றி யாருக்கு என்ன தெரியும். பசியாத நல்வயிறு கிடையாதாம்! அப்படியானல் பருவக் கிளர்ச்சியும் இயற்கையின் உணர்ச்சியும் இல்லாத பெண் இருப்பாளா?

திருமணமாகி இரண்டு வருடங்கள் ஆகிவிட்டன! அம்மம்மா! இந்த இரண்டு வருடங்களில் என் பருவத்தின் எழுச்சியை—மோகத்தின் முணு முணுப்பை எவ்வளவோ அடக்கி இருக்கிறேன். பக்குவமாக சமைத்த உணவைக் கூட உண்ணுமல் இருந்து விடலாம். ஆனல் தண்ணீர் கூட அருந்தாமல் உயிர் வாழ்ந்திட முடியுமா?

"கமலாவுக்கு என்ன இராஜாத்தி" என்று சுலபமாக சொல்லி விடலாம். என் உள்ளப் பசி......! உம்! இதற்கு என் கணவரே அருள் செய்யாமல் தனது உல்லாச வாழ்வுக்கு புதுக் குட்டி தேடித் திரிகிருரே! பிறகு.....?

'ஒரு பெண் இப்படி வெட்கமில்லாமல் பேசுகிருளே' என்று அங்கலாய்க்கலாம் பல பெரியோர். அவர்களுக்கு நான் கூறுவது இதுதான். என் மனத்தின் தவிப்பை தெளிவு படுத்த—இளமையின் தாகத்தை எடுத்துச் சொல்ல—பருவப் பசியின் கோரத்தை அப்பட்டமாகப் பேச—நான் வெட்கப்பட வில்லை. மூடச் சமூகத்தின் முடை நாற்றத்தை மூடி மூடி வைக்க மன மில்லை எனக்கு! மண்டி யிட்டு சமூகத்தின் சட்டத்திற் கடிபணிந்து கண்டதென்ன? ஆகவே பெண் அல்ல பீடைபோலவே பேசுகிறேன். சுருங்கச் சொன்னல் என் சரீரம் சுகம் கேட்கிறது.

இதை வாய்விட்டு கேட்கவா வேண்டும் என் கணவரிடம் பசியால் தவிப்பது போதா தென்று அடிக்கடி — பணத்துக்காக என்னை தொல்லைப் படுத்தினர். நான் பணக்காரியாம். என்

சொத்தெல்லாம் அவருக்குத்தானும்! நகைநட்டு அத்தனையும் கழற்றி விற்பதும்—வேசிகள் வீடு செல்லுவதும் அவர் வேலை. கழுத்தி லிருந்த நகைகள் காலியான பின்னர் அப்பாவிடம் கொடுத்திருந்த நகையை வாங்கிக் கொண்டு வரும்படி ஒருவாரா காலம் இம்சித்தார். அடியும் உதையும் எவ்வளவு காலம் தாங்க முடியும்?

முத்தண்ணுதான் அனுப்பி வைத்தார். நகைகொண்டு வா என்று! வாது புரியும் பருவத்து வக்கணைக்கு இனி எதும் சொல்ல முடியாது. உடம்பை புண்ணுக்கி வாழ்வதைவிட சாவதேமேல் என்ற முடிவோடு வந்தேன்......ஆனால்......இதுவரை எவராலும் கவர முடியாத என் இதய பீடத்திலே உதயமானர் கலைமணி!

இனி எதற்காக மாள வேண்டும்! கலைமணியிடம் அடைக்கலம் புகுந்தேன். தொடர்பு எற்படுத்தினேன். அது பலப்பட்டு விட்டது. முத்தண்ணுவுக்கு நகைகள் தானே வேண்டும்! ஆனால் .........எனக்கு.........?

திருமணமான இரண்டு வருட காலத்தில் கிடைக்காத ஒப்பற்ற இன்பத்தை இந்த இரண்டே நாட்களில் பெற்று விட்டேன். பூரணப் பொலிவு பெற்றேன். இதை நிரந்தரமாக்க ஆசைப்பட்டேன். ஆனல் இதை நிரந்தரமாக்க முடியாது எனக் கண்ட பின்னர்......நான் வாழத்தான் வேண்டுமா? மனக் குழப்பத்தை ஒரு நிலைக்கு கொண்டு வந்தேன். முன்பு பெட்டியில் வைத்திருந்த விஷத்தைப் பற்றிய நினைவு வந்தது.

“இராஜம்! ஏன் எதற்கு என்று கேட்காதே! அந்தப் பெட்டியில் இருக்கும் விஷத்தை எடு”

## கலைமணி

ஆவலால் தூண்டப்பட்டு ஸ்திரீ மணக்கிறாள். களைப்பினால் சலிப்புற்று ஆண் மணக்கிறான்.
—ஆஸ்காரவைல்டு.

"அந்தப் பெட்டியி லிருக்கும் விஷத்தை எடு!" என்று வேலைக்காரி இராஜத்திற்கு கட்டளை யிட்டாள் கமலா! என் மனம் துணுக்குற்றது. விஷம்கூட தயாராக வைத்திருக்கிறாளே! விஷம் எதற்கு? மீளாத தூக்கத்தில் மாளவா? நித்தியமான சாந்தி பெறவா? அப்படி என்ன வந்து விட்டது. நான் அவளைப் புறக் கணித்து விட்டதாக எண்ணுகிறாளா? என் மௌன நிலையை தப்பர்த்தம் செய்து கொண்டாளா? இனி மௌனமா யிருந்தால் .........?

"கமலா! விஷம் எதற்கு?"

"இவ்வுலக வாழ்வில் துன்பமே காணுகிறேன். அதன் தொடர்பை அறுத்தெறிந்து சாக்காட்டின் வயிற்றிலேனும் சாந்தி பெறப் போகிறேன்."

"இது வாழத் தெரியாதவர்களின் பிதற்றல். கோழையின் செயல்!"

"என் உயிரை மாய்த்துக் கொள்ள எனக்கு உரிமை உண்டு. என் ஆசைக் கனவுகள் அத்தனையும் அழிந்தபின் நான் வாழத் தான் வேண்டுமோக்கும்? என் வாழ்வு எங்கும் ஏமாற்றமே எதி ரொலிக்கிறது."

"உண்மைதான் கமலா! ஆவலால் தூண்டப்பட்டு பெண் மணக்கிறாள். களைப்பினால் சலிப்புற்று ஆண் மணக்கிறான். கடைசியில் இருவரும் ஏமாற்ற மடைகிறார்கள் என்ற ஆஸ்கார் வைல்டின் தத்துவப்படி நீயும்—முத்தண்ணாவும் ஏமாற்ற மடைந்து விட்டீர்கள். ஆனால் நீயும்—நானும் ஏமாற்ற மடையப் போவ தில்லையே!"

"பிறகு என் மௌனமாய் இருக்கிறீர்கள். உங்கள் கலகலத்த பேச்சு சுருதி யின்றி ஈன சுரத்தில் என் இருக்கிறது. நான் வந்து இரண்டு நாட்களாகியும்.........?"

"என் முடிவுக்கு வர வில்லை என்று கேட்கிருயா? நீயும், நானும் வாழவேண்டு மென்று உன்னை சந்தித்த அன்றே முடிவு செய்து விட்டேன். அதிலே மாற்ற மில்லை......ஆனல்"......

"வழுக்கி விழுந்த என்னேடு எப்படி வாழ முடியும்? என்று நினைக்கிறீர்களா?"

"சறுக்கு நிலத்திலே சென்ற நீ வழுக்கி விழுந்ததில் ஆச்சரியமா? மேலும்......பரமண்டலத்திலே யிருக்கும் பிதாவைப் பற்றி போதனை செய்யும் பாதிரிகள்—காசாயம் தரித்து வேஷ மணிந்த வேதாந்திகள்—முக்திக்கு வழிகாட்டும் சக்தியுடைய பண்டார சன்னதிகள்—பரமாத்மாவையும் ஜீவாத்மாவையும் பற்றி கதாக் காலட்சேபம் செய்யும் குண்டலக் கவிராயர்கள் ஆகிய இவர்களும் இகத்தை வெறுத்த "முனி" களும்கூட வழுக்கி விழுந்து விடுகிருர்களே! இல்லறப் பட்டினியால் ஏங்கிக் கிடந்த ஒரு சாதாரண அபலை வழுக்கி விழுவது ஆச்சரியமா? இதைப் பற்றி நான் நினைக்கவே யில்லை. காரணம் வேறு! நாமிருவரும் சென்னைக்குத்தான் போக வேண்டும். நேரில் சென்னை சென்று வேலை கேட்டதில் ஒரு மாதத்தில் வேலை எனக்குக் கட்டாயம் தருவதாக வாக்களித்து இருக்கிருர் நண்பர் ஒருவர்! வேலை கிடைக்க ஒரு மாதம்—பிறகு சம்பளம் வாங்க ஒரு மாதம்—ஆக இரண்டு மாதங்களுக்கு செலவுக்கும்—தட்டுமுட்டுச் சாமான்கள் வாங்கவும் பணம் வேண்டுமே! என்ன செய்யலாம் என்று மூளையைக் குழப்பிக் கொண் டிருக்கிறேன். நான் சம்பாதித்து மீத்து வைத்திருந்த ரூ. 500-யும் ஒரு பெரிய மனிதரிடம் கொடுத்து வைத்திருக்கிறேன். அவரிடம் வாங்கலாம் என்ருலோ அவர் ஏதோ ஒரு கேஸ் விஷயமாக தலை மறைவாக இருக்கிருர். வீட்டிலோ பணம் திருடும் கெட்ட வழக்கமே எனக்குப் பிடிக்காது. கேட்டாலும்—கொடுக்க மாட்டார்கள். இந்த மனச் சிக்கலில் சோர்வு அடைந்திருக்கிறேன். இதுவே என் மௌனத்திற்குக் காரணம். கமலா இதை தப்பர்த்தம் செய்துகொண்டு......?"

"இதோ இந்தத் தாலி சங்கிலியையும், வளையல்களையும் விற்று......"

"கமலா நகைநட்டுகளை விற்று நான்கு நாட்களில் நாசம் செய்து வாழ்க்கையை விரயம் பண்ணி நம்பி வந்தவளை நட்டாற்றிலே தவிக்க விடும் இளைஞர் கூட்டத்திலே என்னையும் சேர்த்து விட்டாயா?

இதற்குமேல் அவள் என்னேடு ஏதும் பேசாமல் இருந்தாள். இராஜம் கூஜாவில் பால் வாங்கிக் கொண்டு வந்தாள். சிறு பொட்டலத்தி லிருந்த விஷத்தை—நீலத் துத்தத்தை—பாலில் கலந்தாள். இப்படியும் அப்படியும் 'டம்ளரை' உருட்டி விஷத் தைக் கலக்கினுள். பாவம்! மரணத்திலே அவளுக்கு எவ்வளவு பயமற்ற துடிப்பு. ஒரு பெண் சாகத் துணியும்போது நான் என்ன சாவுக்குப் பயந்த கோழையா?

"கமலா! நீயே இவ்வுலக வாழ்வை உதறிச் செல்லும்போது எனக்கு உயிர் வெல்ல மல்ல! எனக்கும் கொடு......" என்றேன் நான்.

இராஜம் அறையைவிட்டு வெளியேறிப் போனுள்!

இருவரும் இரண்டு டம்ளர்களில் விஷப்பாலை ஊற்றிக் கொண்டோம். இரு டம்ளர்களும் நெருங்கி ஒன்ருேடொன்று மோதின. மரணத்தின் கோட்டை வாயிலை நெருங்குவது போன்ற நினைப்பு. உதடுகள் துடித்தன. வியர்வை கொட்டி யது. இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். மரணத்திற்கு முன்பு இவ்வுலகை மீண்டும் ஒரு முறை திரும்பிப் பார்க்க வேண்டும்போல் தோன்றியது.

சத்திரத்து ஜன்னல் வழியாக என் பார்வையைச் செலுத்தி னேன். எதிர்த்த வீட்டினுள் இளந் தம்பதிகள்! வெளியே புறப் படப் போகும் தன் கணவனுக்கு அந்த யுவதி ஆடை அணிவிக்கும் அழகுக் காட்சியைப் பார்த்து விட்டேன். உயிர்மீது ஏதோ ஒரு பற்று! "நாம் ஏன் சாக வேண்டும்! நமக்கு முன் எத்தனையோ காதலர்கள் தற்கொலை செய்துகொண்டு உலகுக்குப் படிப்பினை போதித்தார்கள். ஆனுல் அவர்கள் செத்துப் போனதால் சமு தாயத்தின் சண்டித்தனம் ஒரு சிறிதும் சரிந்தபா டில்லை. நாம் இறப்பதால் பய னில்லை. நாம் வாழ்ந்து காட்டுவோம்" என்று திட சங்கல்பம் செய்தேன் ஒரு விநாடி நேரம்! அவள் இதழ் முனையை விஷம் நெருங்கி விட்டது. "கமலா! எட்டு நிமிடத்தில் சாகப் போகிருேம். ஆனுல் எட்டு விநாடி சிந்தித்து எட்டு நாள் தவணை கொடு. அவரைக் கண்டு பிடித்து பணத்தோடு வரு கிறேன். எண்பது ஆண்டுகள் வாழலாம்" என்று கூறினேன். சில விநாடிகள் என்னைப் பார்த்தவாறு இருந்தாள். என்ன நினைத்

தாளோ! இரண்டு டம்ளரில் இருந்த விஷமும் கீழே கொட்டப் பட்டது. அடேயப்பா! எதிர்த்து வந்த ஈட்டி முனை விலகி விட்டது. இல்லாவிடில் வந்த வேகத்தில் நெஞ்சை பிளந்திருக் குமே ஈட்டி!

கொஞ்ச நேரம் அறை எங்கும் மௌனம் நிலவிற்று.

"எட்டு நாட்கள் நான் எங்கே இருக்க?"

"திருச்சியில் இராஜனிடம் தங்கி இருக்க முடியுமா? அங் கிருந்து நேரே சென்னை சென்று விடலாம்."

இதற்கு சரியென ஒத்துக் கொண்டாள் கமலா. காலை வண்டிக்கு அவளை திருச்சிக்கு அனுப்பி வைத்துவிட்டு தலை மறை வாக இருக்கும் அந்தப் பெரிய மனிதரை தேடிப் பணத்தை வாங்க நான் கிளம்புவ தென்றும் தீர்மானித்துக் கொண்டோம் இருவரும்.

"என் மோன நிலை உன்னை சோதனை செய்து விட்டது இல்லையா கமலா"

"சோதனையை வெல்வதில் சாதனை காட்டினால்தானே வாதனையை முறி யடிக்க........."

"நிச்சயமாக முடியும் கமலா!"

வெளியே சென்ற இராஜம் திரும்பி வரவே இல்லை. எங்கே போனளோ?

மறுநாள் கமலாவை திருச்சிக்கு அனுப்பி வைத்தேன். "ஒன்று இரண்டு என்று நாட்களை எண்ணிக் கொண்டே இருப்பேன் விரல் விட்டு" என நினைவூட்டினாள் தவணையை.

ஊர் வந்தவுடன் அப் பெரிய மனிதர் இருக்கும் இடத்தை துப்பு வெட்டினேன். கடைசியில் அவர் நீலகிரியி லிருக்கிறார் எனக் கேள்வி யுற்றேன். அங்கே சென்றேன். என் நிலைமையை, நேர்ந்த சம்பவத்தை எடுத்துச் சொன்னேன். "நீ வாழ்வாயாக" என ஆசிர்வதித்து பணத்தைக் கொடுத்தார் அப்பெரியவர்.

எட்டாவது நாள்! திருச்சிக்குச் சென்று கமலாவை அழைத்துச் செல்ல வேண்டிய தினம்.

வீட்டிலுள்ள அனைவரையும் பிரிந்து செல்லப் போகிறேன். இனி எப்போது காண்பேனோ? எல்லோரையும் மீண்டு மொருமுறை வாஞ்சையோடு பார்த்துக் கொண்டேன். பாசப்பிணைப்பு என்னை கட்டிப் பிடிக்கிறது. ஆனால் இதே போல குடும்பத்தைத் துறந்து இடர்களைத் தாண்டி என்னை நம்பி வந்து காத்திருக்கிறாளே கமலா—அவளுடைய கதி என்ன ஆவது?

மனதை உறுதிப் படுத்திக் கொண்டேன். பணத்தை எடுத்து மடியிலே வைத்தேன். பெட்டி படுக்கையைத் தூக்கிக் கொண்டு வெளித் திண்ணைக்கு வந்தேன். வேகமாகச் சென்ற ரயில் பழுதான தண்டவாளத்தி லிருந்து சடா ரென்று கீழே சாய்ந்தால்—அப்போது வண்டியி லிருப்போரின் மனம் என்ன பாடுபடும்?

அவ்வளவு பெரிய பலத்த அதிர்ச்சி!

“மிஸ்டர்! உங்க பெயர்தான் கலைமணியா?”

“ஆம்! தாங்கள் யார்? எந்த ஊர்?”

“இந்த ஊர்தான். நீங்கள்.........”

“இந்த ஊர் ஆள் என்றால் நம்பி விடுவேனா? உண்மையை மறைக்க வேண்டாம்.”

“இது உங்களுக்கே நன்றா யிருக்கா? இப்படி அநியாய மான காரியத்தைச் செய்யலாமா?”

“சற்று நிதானமாய்ப் பேசினால் நல்லது.”

“பெற்ற பாசம் கேட்கலியே! என் மகள் எங்கே? அவளைப் பார்க்க வேண்டும். எங்கே இருக்கா?

கனல் பெருக்கும் நெருப்பை மிதித்து விட்டேனா? காது செவிடுபடும்படி யாரோ என்னை அடித்து விட்டார்களோ? உடலை உலுக்குவதுபோல உணர்வு தட்டியது. காது கிர் ரென்று இறைந்தது. தலை சுழன்றது. மெய் சிலிர்த்தது. அப்படியே உட்கார்ந்து விட்டேன். போலீஸாரிடம் அகப்பட்டுக் கொண்ட கள்ளன் போல சுற்று முற்றும் பார்த்தேன்.

"நான் கமலாவின் தகப்பன்! எங்கே அவளை? சொல்லுங்க மிஸ்டர். மனம் பதறுகிறது." கல்லாய்ச் சமைந்திருந்தாலும் அவர் விடப் போவதில்லை என்னை. "கமலாவையும் தெரியாது—கத்திரிக்காயும் தெரியாது" என்றேன் கோபமாக ஆனால் நாக்குழற!

"ஐயய்யோ! அப்படிச் சொல்லப்படாது. இப்படி விடாப் பிடியாய் சாதித்தால் இரண்டு பேருக்குமே குறைவு. கேவலம் வேண்டாம். நாமே காதும் காதும் கடித்த மாதிரி போயிடறது தான் நல்லது மிஸ்டர்!"

என்று மீண்டும் பிரலாபித்தார். அவர் 'ஒப்பாரி' வீட்டிலுள்ளோர் காதுகளில் விழுந்தால்......என் குட்டு வெளுத்து விடுமே! என் மனம் கரைய அது என்ன.சோப்புக் கட்டியா? நான் கருணை காட்ட மாட்டேன். உள்ளதைச் சொல்ல மாட்டேன் என்று நினைத்தாரோ என்னவோ என் வீட்டுக்குள் நுழைந்தார். தடுத்து நிறுத்தியும் பய னில்லை.

வயது முதிர்ந்த என் தந்தையிடம் முறை யிட்டார். "சட்டப் படி கோர்ட்டில் விவாக ரத்து வாங்கி என் மகளை உங்கள் மகனிடமே ஒப்படைத்து விடுகிறேன். இப்பொழுது என் மகளை கமலாவை நான் பார்க்க வேண்டும்" என கூறி என் தகப்பனாரின் தலையில் அடித்து சத்தியம் செய்தார்.

அவருடைய பேச்சை, உருக்கமான பிரலாபத்தை—தீர்க்கமான சத்தியத்தை நான் நம்பி விட்டேன். இனியும்......சாதிப்பது சரியல்ல! "அவருடைய பெண்ணை ஒப்படைத்து விட்டு வீட்டிற்குள் வா" என்ற கட்டளை பிறந்தது என் தந்தையிடமிருந்து.

"இங்கே வாருங்கள்" என்று சொல்லி கமலாவின் தகப்பனாரைக் கூட்டிக் கொண்டு வெளி யேறினேன். "எங்கே இருக்காள்! எங்கே? எங்கே?" என்று முணு முணுத்தவாறே வந்தார் வழி நெடுக.

திருச்சியி லிருப்பதாகத் தெரிவித்தேன். இருவரும் திருச்சிக்கு டிக்கெட் எடுத்துக் கொண்டு வண்டி யேறினோம்.

---

## வக்கீல்

மனச் சாட்சியின் அடிப்படையில் நீதியல்ல.
சட்டமே நீதிக்கு அடிப் படை. —யாரோ.

வண்டி ஏறினோம் நானும் என் மகளும் "மாமா! வருகிறேன் மறந்துவிடமாட்டீர்களே" என்றான் அந்தக் குறும்புக்கார கலைமணி. என் மகள்—கமலாவை கூட்டிக் கொண்டு ஓடிப் போய் என் மானத்தை வாங்கப் பார்த்தான் அவன். துணிகரமான செயல்களில் அனுவசியமாக இறங்கக் கூடியவன்தான் என்பதை அவனை பார்த்தமட்டில் அறிந்து கொண்டேன். 'மாமா' என்ற வார்த்தையை உபயோகிக்க அவனுக்கு எவ்வளவு தைரியமிருக்க வேண்டும். கோட்டைக் குள்ளேயே அவனுக்கு உளவாளி இருக்கும் போது என் அவனுக்கு நெஞ்சழுத்தம் இருக்காது. எப்படியோ சாமர்த்தியமாகப் பேசி என் மகளைக் கொண்டு வந்து சேர்த்தேன். அவன் விடை பெற்றுக் கொள்ளும் காட்சி பரிதாபகரமாய்த்தான் இருந்தது. அதற்காக.........

ராஜம் வந்து விஷயத்தை சொல்லி யிருக்கா விட்டால்......?

அன்று கோர்ட்டில் ஒரு வழக்கின் 'ஆர்க்குயூமெண்ட்' முடித்துக் கொண் டிருந்தேன். சட்ட நுணுக்கங்களைத் துருவித் துருவி பேசினேன்.

"தானாகவே சுயேட்சையாக எதிரி இந்த காரியத்தை செய்தார் என்று சொல்வதற்கு முடியாது. விமலாவின் செய்கையே எதிரியைத் தூண்டி யிருக்க வேண்டும். அடுத்த அடுத்த வீடுகளில் வசித்து வந்ததால் எவ்வாறோ எதிரிக்கும் விமலாவிற்கும் தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. ஒரு பெண்ணின் சம்மத மில்லாமல் நாளா வட்டத்தில் இந்த கள்ள நட்பு வளர்ந்திருக்க முடியுமா? நீதிபதி அவர்கள் சற்று யோசித்துப் பார்க்க வேண்டுகிறேன். புருஷனுடைய இம்சையை பொறுக்க மாட்டாமல் விமலா எதிரியோடு ஓடிவிட ஆசைப்பட் டிருக்கிறார். எதிரியும் உடன்பட் டிருக்கிறார். தப்பி ஓடிய எதிரியும் — விமலாவையும் கண்டு பிடித்து சட்டப்படி போலீஸ் நடவடிக்கை எடுத்திருக்க வேண்டுமே யல்லாது இப்படி எதிரியை பலமாக தாக்கி யிருக்கவும்

வேண்டாம். கோர்ட்டில் இப்படி யொரு வழககை ஜோடித் திருக்க வேண்டாம். நீதிபதி அவர்களே! எதிரியின்மீது சாட் டப்பட் டிருக்கும் குற்றம் ருசுவாக வில்லை. சாட்சிகளும்—சந் தேகாஸ்பதமான கட்டங்களை விவரித்திருக்கிறார்களே ஒழிய விம லாவை ஆசை வார்த்தை காட்டி 'மை' வைத்துக் கூட்டிக் கொண்டு போனதாக நிரூபிக்க வில்லை.''

இப்படி என் விவாதத்தை முடித்தேன்.

நான் சட்டத்தை அலசிப் பிழிந்து அவனுக்காக—அந்தப் பெண்ணைக் கடத்தியவனுக்காக — வக்காலத்து வாங்கினேன். கேஸுக்கு பீஸ் தானே! நீதியைப் பற்றி நமக் கென்ன் கவலை! சட்ட மிருக்கிறது. சாட்சி ருஜு வேண்டும். இந்த அடிப் படையில் அணுவளவேனும் பிசகாமல் பேசி விடுகிறோம். அவ்வளவுதானே நமது வேலை. அந்த எதிரிக்கு விடுதலை! அந் நேரம்........இராஜம்—வந்து கோர்ட்டு வாசலில் நின்றுகொண்டு என்னை அழைத்தாள்! ஒரு மைல் ஓடி வந்து நின்றவளைப் போல 'கிசு கிசு' என்று இளைத்தாள் அவள்.

''என்ன இராஜம்?''

''ஐயா! நம்ம கமலா......!''

''என்ன? கமலாவுக்கு என்ன? முத்தண்ணா என்னமும் செய்து விட்டானா? பதறாமல் சொல்லேன். என் நடுங்கு கிறாய்?''

''மதுரையில் கலைமணி என்ற ஆளோடு சேர்ந்து உம்.....''

''என்னடி உளர்றே! விஷயத்தை குழப்பாமல் சொல் றியா இல்லையா?''

''விஷத்தைக் குடிச்சி......''

''என்ன! நிஜமாகவா? நீ பார்த்தாயா?''

''நானும் கூடத்தானே ஐயா இருந்தேன். அவுங்க செய யறது பிடிக்காமே ஓடி வந்துட்டேன்.''

"ஏதாவது அசம்பாவிதமா நடந்திருக்குமா?"

"இதற்குள் அங்கே என்ன ஆச்சோ?" என்று சொல்லி அழுதாள் இராஜம்.

இதற்குமேல் அங்கு இருப்புக் கொள்ள வில்லை. கோர்ட்டிலேயே உடையை களைந்து வேறு உடை போட்டுக் கொண்டு கிளம்பினேன் மனம் பதறிப் போய்! இராஜத்தை கன்னியா குமரிக்கு போகச் சொல்லி விட்டு, நாகர்கோவில் பயோனியர் பஸ் ஸ்டாண்ட் வந்தேன். நல்ல நேரந்தான் உடனே பஸ் கிடைத்தது. சகிக்க முடியாத துக்கம் என் மனதைப் பிடித்து உலுக்கியது. பிரபலமான வைக்கீல் நான். என் பெயரைச் சொன்னால் ......நாகர்கோவில் வட்டாரமே மரியாதை காட்டும். என் வீட்டிலேயே திருட்டா? என் மனதில் தேள் கொட்டியது போல் நெறி கெட்டியது.

கலைமணியை கையோடு பிடித்து விட்டேன். பெட்டி படுக்கையோடு புறப்பட்டுக் கொண் டிருந்த அவனை அந்நேரம் கைது செய் திருக்காவிடில் அண்டர் கிரவுண்டுக்குப்போ யிருப்பான். என்னுடைய திறமையான பேச்சை நயம்—பயமாய் அள்ளி வீசினேன். என் இந்திரஜால வேடிக்கையை நம்பி விட்டான் கலைமணி! இருவரும் திருச்சிக்கு வந்தோம். என் மகளின் பதட்டப் புத்தி என் மூளையை கலக்கிற்று. இஞ்ஜினில் விழுந்து தற்கொலை செய்யப் போனாளே சண்டாளி! அப்பொழுதும் என் கிரகச்சாரமே என்னைக் காப்பாற்றியது. எப்படியோ ஒரு தினுசாய் சரிக்கட்டி கொண்டு வந்து சேர்த்தேன் என் மகளை!

அப்பா அடிப்பார்—உதைப்பார்—என்ன வெல்லாமோ திட்டுவார் என்றெல்லாம் என் மகள்—கமலா எண்ணியிருப்பாள். இனி அவளை தந்திரமான வழியில்தான் திருப்ப வேண்டுமென்று எனக்குத் தெரியாதா? என் அமைதியான விசித்திரப் போக்கைக் கண்டு கலைமணிகூட என்னைப் பைத்தியக்காரன் என்றுதான் நினைத்திருப்பான். வக்கீல் தொழிலுக்கும் கோபத்திற்கும் ஜென்மப் பகை! இந்த சட்ட நுணுக்கம் அவனுக்கு எங்கே தெரியும்.

எனது சட்டப் பிரச்சினையினால்—தந்திர வார்த்தையினால் கலை மணியை கலங்கடித்து விட முடியும். என் சக்தியை பிரயோகித்தால் பாவம்! சிறுவன்......தாங்க மாட்டான்! மேலும் அவனைக் கண்டிக்க எனக்கு சட்டப்படி அதிகார மில்லை! என் மகள் சம்மதத்தின் பேரில் கலைமணி இக் காரியத்தில் ஈடுபட் டிருக்கிறானே. அப்படி இருக்கும்போது 'லாபாயிண்டி'ன்படி எந்த செக்ஷனையும் அவன்மீது போட முடிய வில்லை.

கலைமணியும் கெட்டிக்கார புத்திசாலியான பையன். மனோ தைரியம் நிறைந்தவன் ஆணழகன் அவன்மீது குறை ஒன்றும் சொல்ல முடியாது என் மகளுக்கு.........? சே! உலகம் என்ன நினைக்கும். விவாக ரத்துக் கோரி முத்தண்ணாவை நீக்கிவிட்டு... ......கலைமணியின் கையிலே என் மகளை ஒப்படைக்கலாம். மகா ராணியாக வாழ்வாள். இது துணிகரமான சீர் திருத்தம்தான். ஆனால்......இந்த விவாக ரத்தினால்—குடும்பத்தில் குழப்பமும்—என் மனைவியின் பகையும்—ஏற்படுமே என்னை இழிவாகப் பேசுவார்களே! ஆகவே......

என் மகளின் மனப்போக்கை மாற்ற முயன்றேன் இப்படிப்பட்ட செய்கையால் ஏற்படும் விபத்துக்களை—இளைஞர்களின் ஸ்திரந்தரமற்ற புத்தியைப்—பற்றி எடுத்தோதினேன். பாவ புண்யம் பற்றி விளக்கம் கொடுத்து அவள் மனதை இளகச் செய்தேன். முடிவாக "இந்த வயசான காலத்தில் உன்னால் எனக்கு இவ்வளவு பெரிய கேவலமா?" என்று கேட்டேன். என் போதனை அவள் மனதை நெகிழச் செய்திருக்கும். எப்படியாவது ஊரார் வாயை மூட வேண்டுமே! உலைவாயை மூடி விடலாம் ஆனால்......?

---

# முத்தண்ணா

பணியாளை எஜமான் அவமானம் செய்தால் அவனே வேலையை விட்டுப் போய் விடுவான். கீழ் அதிகாரி மீது மேல் அதிகாரி கோபித்தால் கீழ் அதிகாரி வேலைக்கு மங்களம் பாடிவிட்டுச் செல்வான் ஆனால் மனைவி மீது கணவன் அவமானம் சுமத்தினால் அவள் வாழ்க்கைபாழ்.

—காந்தியடிகள்

உலை வாயை மூடிவிடலாம்! ஆனால் ஊர் வாயை மூட முடியுமா? முத்தண்ணாவின் மனைவி—ஓடிப் போனவள்-நடத்தைப் பேதகமானவள்! என்று உலகம் இழிவாகப் பேசுமே! 'இப்படி' நடக்கும் என்று அப்போதே தெரிந்திருந்தால் என் போக்கை மாற்றியிருப்பேன். ஆனால்......இன்று கமலா......களங்கப்பட்டு விட்டாள். சந்திரனுக்கு ஏற்பட்டிருக்கும் களங்கத்தை நீக்க முடியுமா? என் தலையிலே மீண்டும் சுமத்திப் போய் விட்டார் மாமா.

நான் வெளியூர் போயிருந்த சமயம் அவள் தப்பிச் சென்றது-கலைமணியோடு எங்கோ கம்பி நீட்டியது—மாமா கண்டுபிடித்தது எனக்கு எல்லாம் தெரியாது என்று கருதிக் கொண்டிருக்கலாம். முழுவிபரம் தெரியாவிட்டாலும் விஷயத்தை கிரகித்துக் கொள்ள முடியாத மூடனல்ல—விழிகண் குருடனல்ல—நான்! "இனி அசம்பாவிதம் நடக்காமல் பார்த்துக் கொள்ளுங்கள் மாப்பிள்ளை" என்று அந்த கிழட்டு மாமா கூறிவிட்டுப் போனார். இதுபோதாதா என்ன நடந்திருக்குமென்று ஊகித்துக்கொள்ள. இனி...இப்படி நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டுமாம். நான் என்ன சொல்வேன்? பொருள் களவு போய் விடாமல் கவனமாய்க் காவல் புரியலாம் ஆனால் காப்பாற்றப்படும் பொருளே கள்வனை நாடிச் செல்கிறதே! அப்படியானால் நான்என்ன ஏமாளியா கோமாளியாக?

எனக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டியவள் என்னையும் மீறி செல்வதென்றால் நான் பொறுக்கத்தான் வேண்டுமா? கடிதம் பிடிபட்ட அன்றே நன்றாக புத்தி கற்பித்தேன். பாதுகாப்பை பலப்படுத்தினேன் 'எமன்' போலே வந்தான் வெளியூர் போவோம் என்று எனது நண்பன் தாமோதரன். இச்சமயம் பார்த்து தப்பி விட்டாள் கள்ளி! காப்பான் பெரிதா கள்ளன்பெரிதா? ஆனால்...... இனி என்னிடமிருந்து தப்பிச் செல்லவா?

கமலா இப்படிக் கெட்டுப் போனதோடு எவ்வளவு இழிவை தேடிவிட்டாள் தனக்குமட்டுமல்ல எனக்கும்தான்! இவள் உயிர்

வாழத்தான் போகிறாளா மானம் ரோஷம்—சூடு—சுரணை அற்றவளா? கற்பை இழந்தவளா ஐயோ! அவளை என்னென்ன செய்தானோ அந்த அயோக்கியன். அவள் கதுப்புக் கன்னத்தில்—சிவப்பு உதட்டில்—வேண்டாம்!—நினைக்கவே வேண்டாம்!! நெஞ்சு பிளந்து விடும்!!! என் உரிமைப் பொருள் என்று தெரிந்திருந்தும்—தன்னை மாற்றானுக்கு ஒப்படைத்த அவளை துரத்தி விடலாமா? சே! துரத்துவதா? இது அவர்களுக்கு அனுமதிச்சீட்டுக் கொடுத்தது போல் ஆகிவிடும் அவளைக்கொன்று விடலாமா? இதுவும்கூடாது. இந்த இரண்டில் எதைச் செய்தாலும் உலகம் சிரிக்கும். என்னைத்தான் தூற்றும் அப்படியானால் அவளோடு வாழ்வதா? என் கூடாது? இந்தக் களங்கத்தை மூடிவைக்காது போனால் 'இன்னோர் மனைவி' இப்படி என்றுதானே உலகம் சொல்லும். அதற்காக அவளும் நானும் புருஷனும் மனைவியுமாக இருக்க வேண்டியவர்கள் தானா? அவள் சிறுமியாக இருக்கும் போது என்மீது க்சப்பைக் காட்டினாள். அன்றும் இன்றும் ஒரே பந்தாவில் சுழல்கிறாள். என்றுமே—இப்படித்தானா...? சிற்றாடை உடுத்தி சிறு வீடுகட்டி சிறார்களோடு விளையாடித்திரியும் சிறுமிப் பருவத்திலே கமலா துடுக்குக்காரிதான். வெடுக்கென்று பேசுவாள் என்னைக்கண்டவுடன். ஒருநாள் அவள் கட்டியிருந்த மண்வீட்டை அழித்து விட்டேன் "மூட்டை தூக்கி முத்தண்ணா! உனக்கு எவ்வளவு கொழுப்பு?" என்றாள் சிறுமி கமலா! சீறி விழுந்தேன் அவள் மேல்; தலையில் நறுக்கென்று ஒரு குட்டு குட்டினேன் அழுது கொண்டே அப்பாவிடம் சொன்னாள் அவள். இதற்கு நான் பயப்படுவேனா? எனக்குப் பரிந்து பேசத்தான் அக்காள் இருக்கிறாளே! பால்யத்திலும், சரி, பருவமான சமயத்திலும் சரி, அவள் என்மீது காட்டி வந்திருக்கும் கசப்புக் கொஞ்ச நஞ்சமல்ல. அக்கசப்பு இன்று வரையிலே கரையவில்லை.

"கட்டிக் கொண்டால் எல்லாம் சரியாகிப் போய் விடும்" என்றாள் அக்காள். கமலாவின் தாய் வழிச் சொத்து தன்தம்பிக்கு—எனக்கு கிடைக்க வேண்டும் என்பதற்காகவே கமலாவைக் கட்டி வைத்தாள் அக்காள். அதனால் நான் அவள் துடுக்குத்தனத்தை வாய்க்கொழுப்பை அடக்கவேண்டு மென்பதற்காகவே அவளை மணந்தேன்.

முதல் இரவு தந்த ஏமாற்றம் என்மன வெறுப்பைப்பற்றி எரியச்செய்தது. 'சீ' "என்று உதறிய அந்தச் சிறுக்கியை சிறுகச் சிறுக ஆசையால் சாகடிக்க வேண்டும்மென கங்கணம்

கட்டினேன். ஆனால்......எனது அடக்குமுறை அவளை வேறு திசையில் திருப்பிவிட்டது. அவள் மழுங்கிப் போனாள்.

எனது சாட்டை அடியால் சரணை அற்றுப் போனாளோ என்னவோ கலைமணியின் காலடியில் சரண்புகுந்தாள் அவள்.

பட்டா என் பெயருக்கு இருக்க அனுபவ பாத்தியத்தை அவனுக்கா? அடுத்தடுத்துள்ள இரண்டு வயல்களுக்கு ஒரு வாய்க்கால் என்றால் வரப்பு எனக்குத்தான் சொந்தம். ஆம்! அதுதான் சரி! முன் மாதிரி அவளிடம் நடந்து கொண்டால் எரிமலையை நோக்கி விரைந்து செல்வது போலவே முடியும். என் போக்கை மாற்றிக் கொள்ளுவதா? என் சபதம் தோல்வியுறவா?

"பைத்தியக்காரா! உன் போக்கும்—சபதமும்தான் உன் குடும்பத்தை படுபாதாளத்தில் ஆழ்த்தின. இன்னுமா சபதம் பேசுகிறாய். நீ என்ன 'விஸ்வாமித்திரனா?' வீட்டிலே சபதம் செய்துவிட்டு வெளியிலே வேட்கை தீர்க்க—வேசிகள் வீட்டுக்கு ஏன் செல்கிறாய்? உன் நடத்தையே கமலா வழுக்கி விழுந்ததற்கு காரணம்."

"எச்சிற்பட்ட பழத்தை உண்பதா—கசக்கி எறிந்தமலரை நுகர்வதா?

"வேசி வீட்டில் பருகித்திரிகிறாயே இன்பரஸம்! அது கொட்டித்தரப்படும் கிண்ணம் இருக்கிறதே அது டீ கடை கிளாஸ்—பார்பர்ஷாப் கிலேக்கண்ணாடி தெரியுமா? உன் மனைவி வழுக்கி விழுந்தவள்தான். ஆனால் பாசி படர்ந்த இடத்திலே நடக்க விட்டது உன் தவறு அதற்கு அவள் பொறுப்பாளியல்ல."

என் மனச்சாட்சி பேசிற்று. சுழன்று சுழன்று வீசிக் கொண்டிருந்த என் சிந்தனையை நிறுத்தி......கீழே படுத்துக் கிடக்கும் கமலாவின் பக்கம் பார்வையை ஓட்டினேன். கொஞ்சம் கூட பயமின்றி தூங்கிக் கொண்டிருக்கிறாள்—அவளால் வெறுத்து ஒதுக்கப்பட்ட எதிரியாகிய என் அருகில்! இல்லை என் அறையில்! என் அருகிலே படுக்கப் போகிறாளா? அந்த நாடோடிக் காலிப் பயலோடு படுப்பதற்கு தயங்க மாட்டாள். ஆனால் நான் கணவனாயிருந்தும்.........? ஆம் என் சபதத்தை தூக்கி எறிந்தேன் எழுந்தேன் மெதுவாக அவள் பக்கத்தில் போய் அமர்ந்தேன்.

உயரே உயரே எழும்பி அலைகளை பெருக்கும் கடலை, கரையில் நின்று பார்த்தால் தானே பயமாக இருக்கிறது கடலின்

அடித்தளத்தில் அமைதி இருக்கும் அல்லவா "கமலா" என்றேன் அவள் வாய் பேசாது கிடந்தாள்! என் கரத்தால்.........அவள் கன்னத்தை—உதட்டை வருடினேன். ஆனால்—என் இன்பக் கோட்டைத்தூள்தூளாக வெடித்தது.

அவள் புரண்டு குப்புறப்படுத்துக் கொண்டாள். இதற்குமேல் அவளிடம் கெஞ்சிக் கூத்தாடவா "வஞ்சகி" என்றேன் வாய் விட்டு. இனியும் பொறுக்கவா? பொறுக்காமல் என்ன செய்ய முடியும்? வீட்டுச் சத்தம் வெளியே கேட்டால்—'இப்படி' என்று அடுத்தவருக்குத் தெரிந்தால் என் ஆண்மையில் சந்தேக மல்லவா ஏற்படும்.

இனி அவளிடம் நான் நடந்து கொள்ளும் மாதிரியில் தான் அவளைத் திருப்பமுடியும்.

கள்ளிக்கோட்டையில் ரயில்வே வேலை டிக்கெட் பரிசோதகர் உத்தியோகம் கிடைத்தது. பொள்ளாச்சியிலிருந்து கள்ளிக் கோட்டை வந்தோம் அவளுந்தான்! அவள்தான் என் நிழல் என்று உலகம் சொல்லுகிறதே!

என் போக்கைப் பரிபூரணமாக மாற்றிக் காட்டினேன். அவளிடம் நற்சாட்சிப்பத்திரம் பெற்றால்......அப்புறம் கோல் ஆட குரங்காடும் என்பார்களே! ஆனால்......அமைதியான நீர் நிலையில் சிறு கல்லைப் போட்டால் சிறிது சிறிதாக வட்ட அலைகள் பெருகும். பிறகு மெதுவாக மறைந்து விடும். ஆனால் அந்த நீர் நிலையில் ஒரு குச்சியை விட்டு ஆட்டிக் கொண்டே இருந்தால் கோணலும் மாணலுமாக அலைகள் பெருகியவாறுதானே இருக்கும் அதுபோல என் கோப மனத்தில் கொந்தளிப்பு ஏற்பட்டுக் கொண்டே யிருந்தது.

ஒருநாள் குமட்டி குமட்டி வாந்தி எடுத்தாள் கமலா! அவளொரு கர்ப்பிணி! மசக்கை கண்டு இருக்கிறது அவளுக்கு!

'காலண்டரை' தினசரியும் பல தடவைகள் பார்த்துக் கொள்ளுவேன் நாட்கள்—வாரங்களாகி—மாதங்களாகும் போது கணக்கிட்டுக் கொள்வேன். எனினும்.........

பத்தாவது மாதம் எப்போது அவளுக்கு? எனக்கு எப்படித் தெரியும்! ஒருநாள் இடுப்பு வலிக்கிறது என்று முனங்கினாள். "ஐயோ அம்மா" என்று கதறினாள் இது வேறு தொல்லையா? அவளைக் கள்ளிக்கோட்டை சர்க்கார் பிரசவ விடுதியில் சேர்த்தேன்.

# கமலா

குழலினிது யாழினிது என்பர் தம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்.
—திருவள்ளுவர்

கள்ளிக்கோட்டை சர்க்கார் பிரசவ விடுதியில் கொண்டு போய் என்னைச் சேர்த்தார். பிரசவ வேதனையின் கொடுமையை இன்றுதான் அனுபவிக்கிறேன். கொடும் முட்களினால் உடலெங் கும் துளைப்பது போல இருந்தது. இப்படியும் அப்படியும் புரண்டு கொடுத்தேன். சொல்ல முடியாத வேதனை. ஐயய்யோ! பெண் ணாக என் பிறந்தோம். ஆண்களுக் கென்ன இன்பத்தை சுலப மாக விற்று விடுகிறார்கள். ஆனால் பெண்கள் அந்த இன்பத்தை வாங்கி தன்னுள்ளே சுவீகரித்துக் கொள்கிறார்கள். இது மாபெரும் தியாகம். இதை உணராத ஆண்கள் பெண்களை எவ்வளவு அலட் சியமாக ஆசை தீர்க்கும் இயந்திரமாக எண்ணிப் பழகி வருகிறார் கள். அவர்களுக்குத் தெரியுமா பிரசவ வேதனையின் கடைசிக் கட்டம். மயக்க மடைந்தேன். அதன் பிறகு........

நானொரு ஆண் குழந்தைக்குத் தாயானேன். குழந்தை உருண்டு திரண்டு உருளைக் கிழங்கு மாதிரி இருந்தான். ஆஸ் பத்திரியிலேயே சிகிச்சை பெற்றேன்.

என் உடம்பு ரொம்பவும் பலஹீனமாய் இருந்தது. எழுந்து நடக்கவும்—குழந்தைப் பால் கொடுக்கவும்கூட சிரமமா யிருந்தது. கையை அசைப்பது கூட சங்கடமாய் இருந்த தென்றால் என் பல ஹீனத்தை விவரிக்கவா வேண்டும்? முதற் பிரசவமானதாலும்— ஆண் குழந்தை பிறந்திருப்பதாலும் நான் பிரசவத்தின்போது கஷ்டப் பட்டேன் என்று சொன்னார்கள் சில அனுபவசாலிகள். கன்யாகுமரியில் கொஞ்ச காலம் தங்கி யிருந்து ஓய்வு பெற்றால் தேவலாம் எனத் தோன்றியது. அப்பாவை உடனே புறப்பட்டு வரும்படி கடிதம் எழுதினேன்.

அப்பாவும் வந்தார். தன் சந்ததியை பேரனை குல விளக் கைப் பார்த்தார். கையில் எடுத்து முத்தங்கள் சொரிந்தார். குழந்தைக்கு மைனர் சங்கிலி ஒன்றும், மோதிரங்கள் இரண்டும் போட்டார். அளவிட முடியாத ஆனந்தம் அவருக்கு.

அப்பாவுடன் கன்யாகுமரி வந்து சேர்ந்தேன். சிறந்த போஷணை அளித்தார்கள். உயரிய உணவு—ஒப்பற்ற ஓய்வு—இயற்கையின் ஆனந்தப் பூரிப்பு—ஜிலுஜிலு வென்ற கடற் காற்று. இவற்றுக் கிடையே என் உடல் தேறியதில் ஆச்சரியமா? நல்ல டானிக்குகளும் வாங்கிக் கொடுத்தார் அப்பா.

பிரசவத்தினல் உடைந்துபோன உடலை ஒருவாறு தேற்றிக் கொண்டேன். புது மெருகிட்டாற் போல என் மேனி மஞ்சள் பூத்திருந்தது. ஒரு முறை கண்ணாடியில் பார்த்தேன். நான் இப்பொழுது புது அழகு பெற்றிருக்கிறேன்.

ஒரு நாள் குழந்தைக்கு அழகு செய்து—பெரிய பொட்டிட்டு—தள்ளு வண்டியில் வைத்து தள்ளிக் கொண்டு கடற்கரைப் பக்கம் போனேன். கடற்கரை ஓரமாக மணல் தேரியை நோக்கிச் செல்லும் அந்த தார் ரோடில் வண்டியை ஓட்டியவாறு மேற்கு வாயிலில் விழப் போகும் ஆதவனைப் பார்த்தேன். முழுக்கப் பழுத்த ஆப்பிள் பழத்தை கடல் விழுங்குவது போன்ற அற்புதமான சூர்ய அஸ்தமனக் காட்சியைக் கண்டு களிக்க இந்தியாவின் பல பாகங்களி லிருந்தும் பிரயாணிகள் வருவார்கள்.

அப்படியே சற்று நேரம் நின்றேன். எனக்கு அடுத்து கொஞ்ச தூரத்தில் இரண்டு பெண்மணிகள் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். அப்பேச்சு என்னைப் பற்றியதாக இருக்குமோ! லேசாக கழுத்தைத் திருப்பி அவர்களின் பேச்சை செவி மடுத்தேன்.

"இவள்தானே வக்கீல் ஐயா மகள்"

"ஆமா இவாதான். ஒரு வருஷத்துக்கு முன்னலே எவனே ஒருவனை கூட்டிக் கொண்டு ஓடிப் போனவள்"

"குழந்தையும் பெத்துட்டாளா?"

"அது மூஞ்சைப் பாரேன். அப்பனைப் போலவும் இல்லை ஆத்தாளைப் போலவும் இல்லே."

"சரிதாண்டி அந்தக் கள்ளப் புருஷனுக்கு பெற்றிருப்பாள்"

ஐயோ! இச் சொல்லம்புகளை தாங்க முடிய வில்லை என்னால். அப்படியே அவர்களை கடலுக்குள் தள்ளி விடுவோமா! என கோபம் கொப்பளித்தது. ஆனால்......புரணி பேசுவதே பொழுது போக்கு இந்த சீமாட்டிகளுக்கு! அவர்களைக் கடிந்து கொள்வதால்......பயன்......?

குழந்தையை கையிலே இடுக்கிக் கொண்டு வெத்து வண்டியை உருட்டினேன். விறு விறு வென்று நடந்தேன்- பெட்ரோலில் பற்றிக் கொண்ட நெருப்பின் அனல் போல என் உடல் அனலாய்க் கொதித்தது. வாசலில் நின்றுகொண் டிருந்த அப்பா குழந்தையை "வாடா இராசா" என்று கொஞ்சினார். அவர் கையில் குழந்தையை கொடுத்து விட்டு என் அறைக்குள் சென்று கட்டிலில் குப்புற விழுந்தேன். விசும்பி விசும்பி அழுதேன்.

அப் பெண்கள் வீசிய கண்டனக் கணைகள் என் உள்ளத்தை சல்லடை கண்களாக துவாரம் செய்தன.

நான் ஓடிப் போனவளாம்! அதனால் இவர்களுக்கு என்ன? என் இதயத் தவிப்பைப் பற்றி அன்று யாராவது பரிதாபப் பட்டார்களா? இன்று கண்டனக் கணைகளை மாத்திரம் உபயோகிக்கிறார்களே!

கடந்த கால நிகழ்ச்சிகள் வெள்ளத்திலே மிதந்து செல்லும் துரும்புகள் போல புரண்டன. ஆம்! அவரை கலைமணியைப் பிரிந்து ஒன்றரை வருட மாகிறது இன்றோடு, குழந்தை பிறந்து எட்டு மாதங்கள் ஆகி விட்டன.

"கலைமணியோடு ஆனந்தமாய் வாழ்வேன். சென்னைக் கடற்கரையிலே அவருடைய கையைக் கோர்த்து உல்லாசமாய் உலவுவேன் என்று நான் கட்டிய மனக்கோட்டை திருச்சிப் போர் முனையில் அப்பா வீசிய பீரங்கியால் தகர்க்கப் பட்டது. சத்திரத்தில் விஷத்தை அருந்தப் போனேனே அப்பொழுது செத்திருக்கக் கூடாதா? சரி! அச்சாவி லிருந்து கலைமணி காரணங் காட்டி மீட்டினார். திருச்சி ஜங்ஷனிலே இஞ்சினிலே விழப் போனேன். அப்பொழுதாவது அந்த மனிதர் என்னை காப்பாற்றாமல் இருந்திருக்கக் கூடாதா? நான் கஷ்டப் பட பிறந்தவள் தானா?

என்னைக் கைது செய்து முத்தண்ணாவின் சென்ட்ரல் ஜெயிலில் மீண்டும் அடைத்து வைத்து விட்டார் அப்பா! ஓடிப் போன பெண் என்றால் சமுதாயத்தில் கொலை செய்தவளுக்குச்

சமமா? அவருடைய பிரிவைச் சகியா இதயத்தை நான் கெட்டிப் படுத்த எவ்வளவோ முயன்றேன்.

நாளாக ஆக என் கணவரிடம் ஒரு விதமான மாறுதல்—வாஞ்சை ஏற்பட்டன. என்னுடன் என்றுமில்லாத புது மாதிரியில் நெருங்கிப் பழகினர். சுகங் கொடுக்க முன் வந்தார் அவர். ஆனல்......என் இதயத்திலே கலைமணி நிலைத்து விட்ட பிறகு அங்கே முத்தண்ணுவுக்கு இடங் கொடுத்தால் இட நெருக்கடி ஏற்படாதா? என் பரிசுத்தம் பாழ் படாதா? எப்படியெல்லாமோ பேசி—நடந்து என்னைக் காப்பாற்றிக் கொண்டேன். தப்பித்து வந்தேன். இருதலைக் கொள்ளி எறும்புதானு நான்? ஒரு கொடியிலே இருமலர்களா? வானத்திலே சூரியனும்—சந்திரனும்—இன்னும் பல கோளங்களும் மாறி மாறி ஆட்சி நடத்தலாம்! ஆனல், என் இதய அரண்மனையிலே ஒரே ராஜாதான் ஆட்சி செய்ய முடியும், அவர் கலைமணியே! அரச பரம்பரைக்கு அடுத் தடுத்து இடந் தரும் சிங்காதன மல்ல நான்.

'இந்த வாழ்வு நடத்துவதைப் பார்க்கிலும் உயிர் துறக்கலாமே' என்று சிலர் ஆலோசனை கூறலாம். நான் நினைத்தால் சாக முடியும். தற்கொலை செய்துகொள்ள இரண்டு தடவைகள் முயன்று தோற்றேன். இருப்பினும் கடைசியாக—மூன்றும் முறையாக தற்கொலை செய்துகொள்ள......நினைத்தேன். என் வயிற்றிலே இருந்த கரு 'அம்மா' என்ற தீனக் குரலை மீட்டியது.

ஆம்! வாழ்க்கை சாகரத்தில் தத்தளிக்கும் எனக்கு அக் கரு தானே கலங்கரை விளக்கு. அக் கலங்கரை விளக்கை காணும் வரை உயிரோடு இருக்க எண்ணினேன். உயிரைச் சுமந்தேன். அத்தோடு கனமான வயிற்றையும் சுமந்தேன்.

அந்த "லேட் ஹவுஸ்" இருக்குமிடம் இன்பக் கரையாக—சொப்பன புரியாக இருந்து விடக் கூடாதா?

சிறுவனைத்தான் சொல்லொண்ணுத சிரமங்களுக் கிடையே பெற்றெடுத்தேனே — அவனுவது எனக்கு சாந்தி அளித்தால் என்ன? அவனுமா—என் கடந்த காலப் புத்தகத்தின் மறு பதிப்பாக அமைய வேண்டும். கலைமணியின் அச்சுக் கூடத்திலே வார்த்து எடுத்த அதே "டைப்" அவனுடைய கண்கள்......கன்னங்கள்—என் உடல் அமைப்பு பூராவுமே அவரைப் போலவே இருந்தன. "என்னை நீ மறக்கவே முடியாது. இதோ என் பிரதிபிம்பம்".

என் மானசீகத்திலே நின்று கூறுகிறாரா? கலைமணி தந்த வரப் பிரசாதமா என் கண்மணி. அப்படியில்லாமலா 'கள்ள புருஷனுக்கு' குழந்தை பெற்றிருக்கிறேன் என்று ஊர் சொல்லுகிறது. அவரை விதைத்தால் சுரைக் கொடியா முளைக்கும்?

என் செல்வம்—இராஜகுமார். ஆம்! இது அப்பா அவனுக்கிட்ட பெயர். எட்டு மாதங்கள் ஆகின்றன பிறந்து! இப்பொழுதாவது சாகக் கூடாதா? ஊராரின் கண்டனங்களை ஏற்கத்தான் வேண்டுமா? ஓடிப் போனவள்...வழுக்கி விழுந்தவள்—விபச்சாரி என்ற ஈட்டி முனைகளுக்கு என் ஹிருதயத்தை கொடுக்கத்தான் வாழ்கிறேனா? இல்லை. ஆனால்......வாழ ஆசைப் படுகிறேன். என்?

பெற்ற மனம்—பிள்ளைப் பாசம்—என்னைச் சாகாதே என்கிறதே! 'அம்மா! என் பொக்கை வாயைப் பார்! நீ சொக்கிப் போவாய்' எனத் தன் இன்ப வாயைத் திறந்து முறுவலை வாறி இறைக்கிறான் இராஜகுமார்.

அவனுக்குப் பாலூட்டி — சீராட்டி — கண் வளரத் தாலாட்டி—வட்ட நிலாவைக் காட்டி—சிரிப்பு ஊட்டி—நான் மகிழ்ச்சிப் பெருக்கில் மூழ்கி விட முடியாதா? இப்பொழுதே தளர் நடை போடுகிறான்—மழலை மொழியைக் கொட்டுகிறான். "அம்மா...அம்மா" என்று மோகனராகம் பாடுகிறான்—இவற்றை அனுபவிக்காமல் ஆவி துறப்பதா? ஒரு குழந்தைக்காக எத்தனை சகோதரிகள் காசிக்கும், இராமேஸ்வரத்திற்கும் "தவம்" செய்யப் போகிறார்கள்! அப்படிப்பட்ட உவமையிலாச் செல்வம் எனக்கு கிடைத்திருக்கிறதே! கலைமணி கொடுத்த வரத்தை இழப்பதா? நான் வாழத்தான் போகிறேன். என் பொக்கிஷம்— இராஜகுமாருக்கு நான் தானே கதி!

குழந்தை இராஜகுமாரின் குவளை மலர் முகத்திலே தளர் நடையிலே—கலைமணியையும்—இப்பரந்த அகிலத்தையும்—காணுகிறேன்.

இந்த அமைதி நிலைத்து விடுமானால்.........? இது புயலுக்குப் பின் நிலவிய அமைதியா? அல்லது இன்னும் புயல் வரப் போகிறது என்பதை எச்சரிக்கை செய்யும் அமைதியா?

---

# கலைமணி

தன் இரத்தக் கலப்பின் மறு உருவை முறையோடு அனுபவிப்பவனே மனிதன்: —யாரோ.

இன்னும் புயல் வரப் போகிறது என்பதை எச்சரிக்கை செய்யும் அமைதியா? தேதித் தாள்கள் பறந்தன. ஒன்றரை வருடங்கள் சென்று விட்டன. இந்த ஒன்றரை வருட காலத்தை எப்படிப் போக்கினாள் கமலா! ஏன் இந்த நீண்ட அமைதி, நேற்று நடந்தது போல இருக்கிறதே! காலந்தான் சிட்டாய்ப் பறந்துபோயிற்று என்றால் அவளுக்கு சிந்தனையுமா பறந்து விட்டது! அவள் நினைவுத் திரையில் என் நிழலாட்டம் நின்று போனதா? அவளுடைய வாழ்வு மின்சார மென்றால் நான் பைக்காரா நீர்வீழ்ச்சி தானே! பைக்காராவில் நீர் மட்டம் குறைந்து வற்றினால் மின்சார 'சப்ளை' ஏது.

இங்கு நான் அவள் நினைவால் வாடிக் கிடக்கிறேன். ஆனால், அவள் வாழ்கிறாளா?

அவளைப் பற்றி அடிக்கடி தகவல் சேகரித்து அனுப்பி வந்த சி.ஐ.டி. இலாகா திருச்சியிலே இருந்தது. அந்த துப்பறியும் இலாகாவின் இன்ஸ்பெக்டர் ஜெனரல் இராஜனே! கழிந்த ஒன்றரை வருடமாக இராஜன் எவ்வித தகவலும் அனுப்ப வில்லையே! காரணம் என்ன? இந்த விபரத்தை அறிய இராஜனை நேரடியாக விசாரணை செய்யலா மெனக் கருதி அவரை உடனே வரும்படி தந்தி கொடுத்தேன்.

அவரும் வந்தார். வந்த வுடன் விசாரணையை ஆரம்பிக்க முடியுமா?

மாலை நேரம், ஊருக்கு வெளியே இருவரும் உலாவச் சென்றோம். பசுமையே கண்ணுக் கெட்டிய தூரம். நெற்கதிர்கள் தலை சாய்ந்து கிடந்தன. இனி அறுவடை செய்ய வேண்டியதுதான் பாக்கி.

என் பேச்சை ஆரம்பித்தேன். "இராஜன்"......அவர் என் பேச்சை கேட்க விடாமல் இடை மறித்தார்......

"ஸார்! இதோ பாருங்கள் நெற் கதிர்களின் இன்ப அசைவை! நெல் விதைத்து—வரப் பெடுத்து—நீர் பாய்ச்சி—வளர்த்து—அறுவடை செய்து—சூடடித்து—நெற்போர் குவிக்கிறான் தொழிலாளி — விவசாயி! ஆனால் பாவம்! ஒரு பிடி சோற்றுக்கு நாய் போல் அலைகிறான். பரிதாபம் ஸார்!"

என்று தனது லெக்சரை ஆரம்பித்தார் இராஜன். அப்பொழுது எனது தத்துவம் நினைவுக்கு வந்தது.

"வாழ்க்கையிலே கிடைக்கும் இன்பம் சுலபமாக அறுவடையாகும் பயிர் அல்ல, வெகு ஆழத்துக் கிடங்கில்—சிரமத்துக்கிடையே—சுரங்கத்திலே தோண்டி எடுக்கப்படும் தங்கம். இந்தத் தங்கத்தை தோண்டி எடுக்க எத்தனை தொழிலாளர்கள்...... உயிரைக் கூட இழக்க வேண்டிய திருக்கிறது......"

"ஆம்! ஸார். தொழிலாளி தொல்லைகளைத் தாண்டி கண்டெடுத்த தங்கம்......பகட்டுக்காரிகளின் உடலை அலங்கரிக்கிறதைப் பார்த்து பெருமூச்சு விடத்தான் வேண்டுமா?

"இராஜன்! உங்கள் பொருளாதார புரட்சியை வர வேற்கிறேன்......சமுதாயப் புரட்சியும் தேவை யல்லவா!"

"சந்தேக மென்ன இதில். பொருளாதாரப் புரட்சியும்—சமுதாயப் புரட்சியும் இரட்டை குழந்தைகள் ஸார்......ஓ...... மறந்தே போனேன்......வந்த வுடனேயே உங்களிடம் சொல்லியிருக்க வேண்டும். அதற்காக என்னை மன்னித்து விடுங்கள். கலைமணி ஸார்! அக்காளுக்கு குழந்தை—ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. பெயர் என்ன தெரியுமா? இராஜகுமார்"

இச் செய்தி பழனிப் ப ஞ் சா மி ர் த ம் போல இனித்தது எனக்கு. என் கமலாவுக்கு குழந்தை பிறந்திருக்கிறது. ஆகா! எவ்வளவு மகிழ்ச்சி! தூர தேசத்திலே வாழ்பவன் தாய் மொழி பேசுபவனைச் சந்தித்து விட்டால் தெவிட்டாத செந்தமிழைச் சுவைக்க துடிப்பது போல—என் மனம் மகிழ்வால் பந்தாட்டமாடிற்று.

"எப்பொழுது பிறந்ததாம் இராஜன்!"

"எட்டு மாதங்கள் இருக்குமே!"

"இதை எனக்கு முன்பே தெரிவித்திருக்கக் கூடாதா? ஆமாம்! கடந்த பல மாதங்களாக என் கமலாவைப் பற்றி எவ்வித தகவலும் அனுப்ப வில்லை?"

"அமைதி நிலவும் இடத்திலே கலவரத்தை உண்டு பண்ணவா? கிளிக் கூண்டிற்குள் பூனையை விடுவதால்..."

"நான் என்ன கிளியை பிடித்துத் தின்னும் பூனையா?"

"அப்படித்தானே சமூகம் சொல்லுகிறது."

"சரி! அப்படியானல் இப்பொழுது எங்கள் இருவருக்குமிடையே அமைதி நிலவுகிறதா?"

"அதை எப்படி என்னல் சொல்ல முடியும்?"

"தலை வேதனையும், உடல் நோவும் அவரவருக்கு வந்தால் தானே தெரியும்."

"என்மீது கோபிக்க வேண்டாம். நானே உங்களைப் போல உலக அனுபவம் பெருதவன். என்னை மன்னித்து விடுங்கள்."

"இப்பொழுது எங்கே இருக்கிருள்?"

"போத்தனூரில் இருக்கிருர்களாம். அவர் டிக்கெட் பரிசோதகர்."

என் நெஞ்சிலே ஐஸ் கட்டியை வைத்துக் கொண்டேயிருந்தால்......? உடல் பூராவும் இ ர த் த ஒ ட் ட ம் நின்று விட்டது போல மத மதத்து விட்டது.

இராஜன் கீழே கிடந்த நெல் மணியை பொறுக்கிக் கடித்து உமியைத் துப்பி விட்டு அரிசியை தின்று கொண் டிருந்தார். நானும் அவளும் அரிசியும் உமியும் போல என்றுவது பிரிக்கப்பட வேண்டியவர்கள் தானு? இல்லை! ந ா னு ம் அ வ ளு ம் ஒட்டு மாங்கனி!

என் ஆசை ஆகாயத்திலே ஆடிக் காற்றிலே பறக்க விடும் காற்றாடியா? கயிற்றைப் பிடித்து இழுத்து என் ஆசைக் காற்றாடியை கைக்குள் கொண்டு வந்தேன். "இனி......எதிர் காலம் எப்படி மாறினாலும் சரி—ஆனால், குழந்தையை மாத்திரம் பார்த்து விட வேண்டும்" என்று ஆசையை சுருக்கிக் கொண்டேன். குழந்தையை கட்டாயம் பார்த்தே ஆக வேண்டு மென இராஜனிடம் கூறினேன். என்னோடு போத்தனூர் வரச் சம்மதித்தான்! தலை மறைவாகத் திரியும் ஆயுள் கைதி போலீஸ் நிலையத்திற்குள் நுழைவானா? அவள் வீட்டிற்குள் நுழைய எனக்கு உரிமை எது? அப்படியே தைரியமாக நுழைந்தாலும், அங்கே முத்தண்ணா இருந்தால் ......... பேப்பர்களுக்கு நியூஸ்—வக்கீல்களுக்கு கேஸும் கிடைத்து விடுமே! ஆதலால் இராஜனை என்னுடன் அழைத்துச் சென்றேன் தூது அனுப்புவதற்காக.

போத்தனூர் பெரும்பாலும் ரயில்வே ஊழியர் வாழும் காலனி. சாரை சாரையாக ஒரே மாதிரி வீடுகளை வரிசை தப்பாத வேலியால் அழகுபடுத்தி இருந்தனர். மணம் பரப்பும் மலர்த் தோட்டம் இல்லாவிடினும் வீடு தவறாமல் குரோட்டன்ஸ்களால் பூந்தோட்டம் அமைத் திருந்தார்கள்.

ஒரு டீ ஹோட்டலில் உட்கார்ந்து சாயாக்குடித்துக்கொண்டிருந்தோம் இருவரும். அச்சமயம் என்பார்வை ஜன்னல் வழியாக சென்றது டீக்கடைக்கு எதிர்த்த காம்பௌண்டில் ஐந்தாறு வீடுகள் இருந்தன. அந்த மூலை வீட்டின் முன்பு கட்டி இருக்கும் கயிற்றில் ஒரு சேலை காய்ந்து கொண்டிருந்தது. ஆம்! அது அவள் கட்டியிருந்த சேலை மாதிரி ஞாபகம் வந்தது. இந்த மாதிரிச்சேலை கமலா மாத்திரமா கட்டியிருப்பாள்?......வேறு......? "எதற்கும் இராஜனை அனுப்பி விசாரிப்போம்" என்று நினைத்து அந்த வீட்டை அவரிடம் சுட்டிக் காட்டினேன். முதலில் அவர் போக மலைத்தார். நான் துரிதப்படுத்தவும்.......நடந்தார் காம்பௌண்டிற்குள்ளே!

ஆம்! அவளேதான்! நான் நீண்டநேரம் வெளியே நின்றேன். தூரத்துப் பார்வை! தெளிவற்ற தோற்றம்! பாதை ஓரத்தில் பைத்தியம் போலககால்கடுக்கத் தவம் செய்தேன். இராஜன் குழந்தையை தூக்கிக்கொண்டு என்னை நோக்கிவந்தார்.

உடல் ஆடத் தொடங்கிற்று. கைகள் நடுங்கின. கால்கள் நிலத்திலே பாவாமல் தள்ளாடின.

இருகைகளையும் நீட்டினேன், ஆம்! என்குழந்தையை என்னிருகரங்களில் ஏந்தினேன். இரத்தபாசத்தால் உந்தினேன். உச்சி மோந்தேன். கட்டி அணைத்துக் கொண்டேன். அவன்—என்மகன்—தன் முத்துப்பற்களை காட்டி முறுவலித்தான், "உச் உச்" என்று கணக்குவழக்கின்றி முத்தங்களைப் பதித்தேன்-அவன் இன்பத்தேன் வழியும் உதட்டில். என்னைக் குறு குறு வென்று பார்த்தான். என் இரத்த ஓட்டம் அதிகரித்தது என்மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டேன். அவனது சின்னஞ் சிறு ஹிருதய ஓட்டம் என் ஹிருதய ஓட்டத்துடன் கலந்து ஏதோ ரகசியம் பேசிற்று. என்கண்கள் நீரைக் கொட்டின. தன் மலர்க்கரத்தால் என் கன்னத்தை ஒரு தட்டுத் தட்டினான். ஆகா! மகிழ்ந்தேன். பிள்ளைப் பாசத்தின் எல்லையைத் தொட்டுவிட்டேன். இப்படியே இவனைத் தினசரியும் கொஞ்சிட.........?

இராஜன் என் இராஜகுமாரை தன் கரங்களில் வாங்கினார். தூக்கிக் கொண்டுபோய் கமலாவிடம் ஒப்படைப்பதை தூரத்திலே நின்று பார்த்தேன். இராஜன் திரும்பவும் வந்தார்.

"கமலாவை ஒரு முறை பார்க்கலாமா? சற்று தூரமாக இருக்கட்டும். பார்த்து விட்டு போய் விடுகிறேன். இராஜன்! அழைத்து வர மாட்டீர்களா?"

என்று மன்றாடினேன். "அக்காள் இந்த நிலைமையில் உங்களைப் பார்க்க விரும்பவில்லை." என்றார் அவர். ஒரு பெரும் பாறையை என் தலை மீது உருட்டி விடுவது போல் இருந்தது இராஜனின் பதில்.

என்னால் பேசவே முடியவில்லை. என் தொண்டைக்குள் ஏதாவது ஆப்ரேஷன் நடக்கிறதா? என் கமலாவா இப்படிப் பதில் சொன்னாள். என்னால் நம்ப முடியுமா? நான் ஆத்திரப்படுவதால் என்ன ஆகும்? அவள் மனநிலைமை—சூழ்நிலை எப்படியோ? இராஜன் அங்கே இரண்டொரு நாட்கள் தங்கப் போவதாகச் சொன்னார். அங்கிருந்து கிளம்பினேன் தள்ளாடும் மனத்துடன். என்வாய் அடிக்கடி முணு முணுத்துக் கொண்டே இருந்தது. இந்த நிலைமையில்—பார்க்க விரும்பவில்லை என்று!

---

இந்த நிலைமையில் பார்க்க விரும்பவில்லை என்றுசொல்லி அனுப்பினேன் நான். கலைமணியின் மனம் என்ன பாடு பட்டிருக்குமோ! என் நிலைமை? ஆம்! என் நிலைமையில் இப்பொழுது என்னை காப்பது யார்? என் பாரத்தை ஏற்றுக் கொண்டு என்னைப் பராமரிக்கத் தயாராக இருப்பவர் தான் யார்? கௌரவமாக புகழிடம் கொடுக்க முன்வந்திருக்கிறரே முத்தண்ணு! இதே போல என்னைப் பராமரிக்க—புகழிடம் அளிக்க கலைமணிக்கு—தகுதி—திறமை—பொறுப்பு உண்டு ஆனாலும் கலைமணியும் நானும் வாழ்கிறோ மென்றால் எப்பொழுது ஆபத்து சம்பவிக்கு மோ என்ற பயத்துக்கிடையே தானே வாழ முடியும். இதை அன்று நினைக்க வில்லையா நான்? நினைத்தேன் அன்றைய என் நிலை வேறு—இன்றைய நிலைவேறு நான் தப்பி ஓடியவுடன்—அந்த கோலத்தைத் தாங்க மாட்டாமல் முத்தண்ணுவும் அப்பா வும்—என்னை ஒரேயடியாகப் புறக்கணித்து விடுவார்கள் என்றே நினைத்தேன். ஆனால் பிடிபட்டேன். வேறு வழி பிறக்குமென கருதினேன். விவாகரத்து ஏற்படுமென எதிர்பார்த்தேன், அதற்கு மாறாக நான் மீண்டும் பிடிக்காத வாழ்வில் புகுத்தப்பட்டேன். முத்தண்ணுவுக்கும் அப்பாவுக்கும் குடும்பக் கௌரவமே பெரிதாகத் தெரிகிறது. பிறகு எப்படி நான் விடுதலை பெற முடியும்? இன்னொரு முறை தப்பி ஓட இயலுமா? அப்படியே கண்ணிலே மிளகாய்ப் பொடியை தூவிவிட்டு தப்பி விடலா மென்றாலும் முத்தண்ணுவும்—அப்பாவும் எங்களை குடும்பம் நடத்த விடவே மாட்டார்கள். ஆனால்......கலைமணி? இது வீண் கனவுதான். என்ன இருந்தாலும் அவரின்றி நான் வாழ முடியுமா?

"குழந்தையை பார்க்கிறதற்காக கலைமணி அதோ வந்திருக்கிறார் அக்கா" என்று சொல்லிக் கொண்டே இராஜன் வந்தான். அப்பொழுது தான் என் செல்வன் இராஜகுமாரைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தேன். வீட்டுக்கு வெளியே வந்து

எட்டிப்பார்த்தேன். கலைமணி ரோட்டடியில் ஒரு மரத்தின் கீழே நின்று கொண்டிருந்தார். நான் பதட்ட மடைந்தேன். அவசர அவசரமாக என் மகனை அலங்கரித்தேன். அந்த அழகுச் சொக்காவைப் போட்டு பௌடர் அடித்து இராஜ குமாரை—இராஜனிடம் கொடுத்து அனுப்பினேன். வீட்டு வாசலில் நின்று கவனித்தேன். குழந்தையை ஆரத்தழுவினர். உச்சிமோந்து முத்தங்கள் சொரிந்தார் அவர். இரத்த பாசத்தின் துடிதுடிப்பு—குழந்தை அணைப்பின் பூரிப்பு—அவரை என்ன வெல்லாமோ செய்தது! தூரம்—சிரமம்—செலவு எதையும் பொருட்படுத்தாமல் என் மகனை ஆம்! எங்கள் மகனைப் பார்க்க வந்திருக்கிறார்! உண்மை தானே! என் மகன்—எங்கள் கூட்டுக்களிப்பின் கருவூலம்—பருவச சேர்க்கையின் படைப்பு—மோக இணைப்பின் முத்தாய்ப்பு!—அவரால் இருக்க முடியுமா. தன் இரத்தக் கலப்பின் மறு உருவை பார்க்காமல்?

என் செல்வனை என்னிடமிருந்து பிரித்து விடுவாரா? ஒருவேளை இராஜகுமாரைத் தூக்கிக் கொண்டு அப்படியே போய் விடுவாரா? நான் ஏன் இப்படி நினைக்கவேண்டும்? அவருக்கு தன் வாரிசின் உரிமை மீது இருக்கத்தான் செய்கிறது. அதற்காக என் செல்வத்தை என்னிடமிருந்து......? கலைமணி அவ்வளவு கொடுமை செய்யக் கூடியவரல்ல. நேர்மையின் அவதார மல்லவா!

ஆம்! என் மகனைக் கொணர்ந்து சேர்த்துவிட்டு இராஜன் தலையை சொறிந்தவாறு குழைந்து நின்றான் "என்ன இராஜன்" அவர் ஏதாவது சொன்னாரா? என்றேன்.

"அக்கா! அவர் உங்களைப் பக்கத்தில் வைத்து பார்க்க ஆசைப்படுகிறார்."

ஐயோ! என்னைப் பார்க்கவா ஆசைப்படுகிறார். என் மனதிலே பெரிய போராட்டம்.

"இது தகாது! நீயே புயலை வரவழைக்காதே. முத்தண்ணா வின் அந்தப்புறத்திலே வாழ்கிறாய் நீ. அவரைப்பார்க்க உனக்கு உரிமை கிடையாது."

—இது முத்தண்ணாவின் மனைவி

"உரிமை இல்லையா? ஐயோ என் இதய மன்னனைக் கண்டு களிக்கக்கூட உரிமையற்றவளா? இது தவறல்ல கிடைத்த சந்தர்ப்பத்தை இழக்காதே. கடந்தபல மாதங்களாக அவர் நினைவால் வாடிக் கிடக்கிறாயே. கண்குளிரப் பார்த்து சாந்தி அடைந்தால் இனனும் பல மாதங்களை நீ நிம்மதியாகக் கடக்கலாம்.

— இது கலைமணியின் காதலி

"பைத்தியக்காரி! நீ என்ன உலகம் தெரியாத சிறுமியா? சிந்தித்துப் பார். அக்கம் பக்கத்தை திரும்பிப் பார். இந்த அமைதியான சூழ் நிலையை சீரழித்து அயலாரின் சொல்லுக்கு ஆளாகி கேலிக் கூத்துக்கு இடங் கொடுக்கப் போகிறாயா? முத்தண்ணாவின் கிடுக்கித் தாக்குவில் சிக்கி அவஸ்தைப்பட்டு அதிக நாட்களாகி விட்டன. இது உனக்குப் பிடிக்க வில்லையா?"

இன்னும் இதே முறையில் தர்க்கம் நடந்தது. இறுதியில் முத்தண்ணாவின் மனைவியே வெற்றி பெற்றாள். கலைமணியின் காதலி தோல்வியே அடைய வேண்டியவள்தானா? எப்படியோ என் மனப் போராட்டத்தின் வேகத்தைத் தணித்துக் கொண்டு, வாசலில் நிற்கத் தைரிய மில்லாமல்—வீட்டுக்குள் ஓடிப்போய் படுத்தேன். விம்மி விம்மி அழுதேன். இவ்வாறு எவ்வளவு நேரமோ தெரியாது.

மற்றொரு நாள் முத்தண்ணா என்னை வலுக்கட்டாயமாக நாடகத்திற்கு அழைத்துச் சென்றார்.

மூன்றாவது மணி ஒலித்தது. பின்னணி இசை ஜாம் ஜாம் என முழங்கிற்று. "யாதும் ஊரே யாவரும் கேளீர்" என்ற கோரஸ் பாடவும் திரை விலகியது.

திரைமட்டுமா விலகிற்று? என் வரலாற்றுத் திரையை விலக்குவதுதான் இந்நாடகமா? என் ஒருத்திக்காக தீட்டப்பட்ட நாடக ஓவியமா? கதை அமைப்பும்—வசன ஓட்டமும் எறக்குறைய என்ன எல்லாமே என்னை சுற்றி வட்டமிட்டன. சுழலும் பம்பரம் போல என் தலை கிறுகிறு வென்று சுழன்றது. ஐயோ! இன்னும் என்ன வெல்லாம் கதையில் நடக்கப் போகிறதோ?

என் வாழ்க்கையை அப்பட்டமாக எழுதி இருக்கிறான் எவனோ? மூடி வைக்கப்பட் டிருந்த என் கறைபட்ட வாழ்வை பகிரங்கப் படுத்துவதால் யாருக்கு என்ன இலாபம்? உண்மைச்

சம்பவத்தை அப்படியே எழுதி கற்பனை மெருகு சில இடங்களில் கொடுக்கப்பட் டிருக்கிறது. செம்புக்கு தங்கம் முலாம் கொடுத் திருக்கும் திறமையை ஏனைய ரசிகர்கள் பாராட்டலாம். ஆனால் நாடகத்தை தத்ரூபமாக பார்த்துக்கொண் டிருக்கும் நானும்—முத்தண்ணாவும் அனுபவிக்கும் வேதனை.........ஐயோ என் நெஞ்சு படபடத்தது. முத்தண்ணாவை ஏறிட்டுப் பார்த்தேன். கன்னத்திலே கையை வைத்துக் கொண்டு நாடகத்தின் போக்கைக் கூர்ந்து கவனித்தவாறு இருந்தார்.

நாடகம் விறுவிறுப்பாக ஒவ்வொரு காட்சியையும் தாண்டிக் கொண்டிருந்தது. என் வாழ்க்கையில் இன்றைய சீன் நடந்தது. இனி அடுத்த காட்சி அதாவது எனது எதிர்கால வாழ்வின் முதல் சீன் எப்படி இருக்குமோ?

நானும்—மற்ற எவரும் எதிர்பாராத காட்சி! ஆம்! அந்தக் கதையிலே வரும் கதாநாயகன் காதலியிடமிருந்து குழந்தையை திருடிவிடுகிறான். சில நாட்களிலே அவன் பிடிபடுகிறான். காதலியின் கணவன் அவன் மீது வழக்குத் தொடருகிறான். கோர்ட்டில் விசாரணை.

நீதி மன்றம்! கதாநாயகன் குற்றவாளிக் கூண்டில் நிற்கிறான். காதலியும் அவருடைய கணவரும் அங்கே அமர்ந்திருக்கிறார்கள். நீதிபதி கதாநாயகனைப் பார்க்கிறார். அவன் காதலியைப் பார்க்கிறான். அவள் கணவனையும்—காதலனையும் மாறி மாறிப் பார்க்கிறாள் பயத்துடன்.

"இதற்கு என்ன முகாந்திரம் சொல்லுகிறாய்? நீ திருட்டு நடத்திய வீட்டிலே நட்டு நகைகளும், பட்டுச் சேலைகளும், பெட்டியிலே கொட்டிக்கிடக்க அவற்றைவிட்டு குழந்தையை மட்டிலும் திருடி இருக்கிறாயே! காரணம் என்ன?" என்று நீதிபதி கேட்கிறார். கதாநாயகன்..................

என் மனம் வேடன் குறியிலே அகப்பட்டுக் கொண்ட மாடப்புறா போல துடியாய்த் துடித்தது. மிரள மிரளப் பார்த்தேன் என்ன சொல்லப் போகிறானோ அந்தக் கதா நாயகன்? "குழந்தை என்னுடையது. இதற்கு சாட்சி—ருஜு இருக்கிறது. ஆகவே திருடவில்லை—என் குழந்தையை எடுத்துச் சென்றேன்." என்று கதா நாயகன் பதில் சொல்லி இருந்தால் நாடகக் கணவனின் மனம் மட்டுமா துன்புறும்? என் கணவர் முத்தண்ணாவின் மனம்

வேதனையால் கொந்தளிக்காதா? அப்புறம்......இன்று பூராவும் என்னை சித்ரவதை செய்வாரே! இப்பொழுது ஊரார் ஒப்பனைக்கு வாழ்கிறோமே கணவன்—மனைவியாக இது கூட இந்த ஆசிரியனுக்குப் பொறுமையா? கதாநாயகனின் பதில் மெதுவாக வெளி வந்தது சுருதி கூட்டும் வீணைபோல! "குழந்தையின் கழுத்திலே ஒரு சங்கிலி கிடந்தது அதற்காகத் திருடினேன். பிறகு குழந்தையை கொல்ல மனமின்றி என்னுடனேயே வைத்துக் கொண்டேன். இதுதான் உண்மை."

"மற்ற நகைகளையும்—சாமான்களையும் வசதி இருந்தும் களவாட வில்லையே நீ! ஏன்?"

"இந்த ஒரு சங்கிலியே போது மென்ற நினைப்புதான்"

"நீ ஒரு விசித்திரமான திருடன்! உனக்கு ஆறுமாத காலக் கடுங்காவல் தண்டனை விதிக்கிறது சர்க்கார்."

அம்மா! எனக்கு இப்பொழுதுதான் உயிர் வந்தது. முத்தண்ணு என்னைத் திரும்பிப் பார்த்தார். அப் பார்வையிலே சோகமும்—கோபமும் கூத்தாடின.

நாடகத்தின் கடைசிக் காட்சிதான் பாக்கி. ஒருவர் மேடைக்கு வந்தார். "இந்த நாடகத்திற்கு கோவை மக்கள் அளித்த ஆதரவுக்கு மிக்க நன்றி. மக்களின் கவனத்தை பரிபூரணமாய்ப் பெற்று பெரும் அளவுக்கு வசூல் கொடுத்து எங்களையும்—பொது மக்களையும் மகிழ்ச்சியுறச் செய்த பெருமை நாடகாசிரியர் உயர்திரு. கலைமணி அவர்களையே சாரும். எங்கள் நன்றியை அவருக்கு தெரிவிப்பதோடு ரூ. 3,000 கொண்ட இப் பண முடிப்பை அவருக்கு அன்பளிப்பாக சமர்ப்பிக்கிறோம்." என்று பேசினர் அந்த நாடகக் கம்பெனிக்காரர்.

பெருத்த ஆரவாரம், பலத்த கரகோஷம் தியேட்டரை அதிரச் செய்தது. இரும்புக் கடப்பாறையால் என் ஹிருதயத்தை தாக்குவது போல உடல் பதறிற்று. நிலை பெயர்ந்தேன். கலைமணி மேடைக்கு வந்து நின்றார். மாலை சூட்டினர் பலர். பண முடிப்பைப் பெற்றுக் கொண்டார். கம்பீரமாக நின்று இருகைகளையும் ஸ்டைலாக பின்புறம் கட்டிக் கொண்டு அவர் நன்றி தெரிவிக்கும் காட்சி அற்புதமாய் இருந்தது.

"பொது மக்களின் போாதரவுக்கும்—நாடகக் குழுவினரின் பாராட்டுதலுக்கும் என் இதயங் கனிந்த நன்றி. என் பணி மேலும் மேலும் இவ்வாறு வெற்றி பெற எல்லோருடைய ஆதரவும் இருக்கு மானல் நான் நாட்டுக்கு இன்னும் பன் மடங்கு தொண்டு புரிய பின் வாங்க மாட்டேன். வணக்கம்!'' என்ருர் கலைமணி! மீண் டும் கரகோஷம். வானைப் பிளக்கும் கை தட்டலுக் கிடையே மேடையை விட்டுப் புறப்பட்டார். அவருக்கு கிடைத்த இக் கௌரவத்தில் எனக்கும் பங்கு......? இதைப் பற்றி நான் நினைக்கலாமா?

நாடகம் முடிந்தது. முத்தண்ணுவின் பின்னேடு முடுக்கி விட்ட கருவி போல நடந்தேன். குழந்தை இராஜகுமாரை இறுகக் கட்டிக் கொண்டேன். கள்ளனுக்குப் பயந்து பாதையிலே கால் நடையாகச் செல்பவன் முந்தியில் இருக்கும் பணத்தைத் தொட் டுத் தொட்டுப் பார்த்துக் கொள்வது போல...... என் மகனை அடிக் கொரு தரம் பார்த்துக் கொள்வேன்.

'அன்று இரவு முத்தண்ணு என்ன செய்வாரோ—நாடகம் அவரை தூண்டி விட்டிருக்குமே' என்று பயந்தேன். வாசலில் நுழையும் போது கால் இடறி நிலையில் மோதினேன். ஆனல் என் பதட்டத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் சமா ளித்தேன்.

என்ன நினைத்தாரோ அவர். பேசாமல் போய் படுத்துக் கொண்டார். நானும் எப்போதும் போல் தனிமையாய்ப் போய் படுத்தேன். என் மகனை மார்போடு அணைத்துக் கொண்டேன். அந்த நாடகத்திலே நடந்த மாதிரி என் மகன் களவு போய் விட் டால்......? அவன் ஒருவன்தானே நான் உயிர் வாழ்வதற்குக் காரணம். அவனையும் இழப்பேனு?

கலைமணி என் அந்த நாடகத்தை எழுதி யிருக்கிருர். என் னைப் பய முறுத்தவா? அல்லது முத்தண்ணுவின் மனதைப் புண் படுத்தி என்னைப் புறக் கணிக்கச் செய்யவா? ஒரு வேளை என்னை யும் அவரையும் பிரித்து வைத்திருக்கும் சமுதாயத்தின் மீது வஞ் சம் தீர்க்கிருரா? எது எப்படி யிருப்பினும் அந்த நாடகம்—அந்த இரவு மட்டு மல்ல—என் உயிர் உள்ள வரையிலே என்னை வெதும் பச் செய்து விடும்.

வெப்பத்தால் தகிக்கும் இருண்ட ஆப்பிரிக்காவிலே கூட மனிதன் வாழ்கிறான். ஆனால் என் குடும்பம் பூமத்திய ரேகைப் பிரதேசத்தை விட கொடும் உஷ்ணமாக தோன்றியது எனக்கு! வெப்பத்தால் வெதும்பிப் போகும் வெள்ளரிப் பழம் போல் என் மனம் வேதனையால் வெதும்பி போயிற்று.

அந்த நாடகம் பார்த்ததி லிருந்தே முத்தண்ணாவின் நடத்தையில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. முன்பு அவரிட மிருந்த கொடூரம்—கோபம் சுறு சுறுப்பு எல்லாம் மறைந்தன. சோர்ந்து போய் காணப் பட்டார். பழைய துடி துடிப்பான நடையும்—வேலையி லுள்ள ஆர்வமும் எங்கோ ஓடி ஒளிந்து விட்டன! உலகை வெறுத்த வேதாந்தியைப் பார்க்கிலும் அமைதியாக இருந்தார். சோறு போட்டு வைத்துக் கொண்டு பத்து தடவைகள் பையன் கூப்பிட்ட பிறகுதான் எழுந்து வருவார். அவசர அவசரமாக வாயில் அள்ளிப் போட்டு விட்டுப் போய் விடுவார்.

அடிக்கடி லீவு எடுக்கத் தொடங்கினார். இந்த மாற்றங்கள் ஏன்? இதை நான் அவரிடம் எப்படிக் கேட்க முடியும்? கடைசியில் வேலையே வேண்டாம் என்று உதறித் தள்ளினார்.

எந் நேரம் பார்த்தாலும் ஏதோ புதிரைக் கண்டு பிடிக்கப் போகிற பாவனையில் அவருடைய முகம் தோற்ற மளிக்கும். லெபரெட்டரி அறைக்குள் ஆராய்ச்சி செய்யும் விஞ்ஞானி போல அவர் மௌன விரதம் அனுஷ்டித்தார். விஞ்ஞானியாவது ரஸாயனக் கண்ணாடிகளை ஏதாவது நோண்டிக் கொண்டே இருப்பான். ஆனால் அவர்......தன் உடம்பை அப்படி இப்படி அசைப்பது கூட கிடையாது. என் இத்துணை அமைதி? அந்த நாடகம் அவரை நடைப் பிணமாக்கி விட்டதா?

அவருடைய உடம்பு மெலிய ஆரம்பித்தது. வெளுப்பு நிறம் கப்பியது அவர் முகத்தில். அவருடைய மார்பு உள்ளுடைந்து போயிருந்தது.

அவரைப் பார்க்கும் சமயங்களில் தலை குனிந்து நிற்பேன்—சூறுவளிக்கு தலை சாய்ந்து கொடுக்கும் நாணற் புல் போல.

# கலைமணி

கலியாணம் ஒரு சட்டம். சட்டங்களி லெல்லாம் கேடு கெட்ட சட்டம்.
—காட்லின்

சூறாவளிக்கு தலை சாய்ந்து கொடுக்கும் நாணற் புல் போல வருகிற எதிர்ப்புக் கெல்லாம் வளைந்து கொடுத்தேன். கமலா இனி எனக்குக் கிடைப்பாள் என்ற நம்பிக்கையும் தளர்ந்தது. தென்றல் உலாவச் சோலையில் புயல் வீசுவானேன். என் மனத் திரையில் அவளது நினைவுப் படலங்கள் இடை வேளையின்றி ஓடிக் கொண்டே இருந்தன. அவளுடைய தாகம் தீர்ந்து விட்டதா? அல்லது எதிர்ப்பைக் கண்டு அஞ்சி ஒடுங்கி விட்டாளா? அவள் ஆயுள் தண்டனை பெற்ற அந்தமான் கைதி தானு?

இப்பொழுது நாஞெரு சினிமாக் கம்பெனியின் கதை இலாகாவில் வேலைக் கமர்ந்தேன்.

வில்வி ஸ்டுடியோ! இதைத்தான் இன்ப பூமி என்று அநேகர் எண்ணுகின்றனர். இங்கே நடமாடும் ஊர்வசி — மேனகை — திலோத்தமை களைத்தான் "நக்ஷத்திரங்கள்" எனக் கொண்டாடு கின்றனர் சினிமா விசிறிகள். நான் சினிமா உலகத்தைப் பற்றி எவ்வித அபிப்பிராயங் கொண் டிருந்தேனே அது அப் பழுக் கில்லாத உண்மை எனக் கண்டேன்.

இது கலைக் கூடமா? கட்டுப் பாடற்ற விபச்சார விடுதியா? சே! யார் சொன்னது? இங்கேதானே சகல கலைகளையும் கற்க முடியும். இந்த கல்லூரியில் பயிற்சி பெற்று தேறினுல் உயர்தரமான அனுபவம் அடையலாம். அறிவு வளரலாம்! மாட்டின் வால் கூட வளரத்தான் செய்கிறது. ஆனுல் கீழ் நோக்கி! சாக்கடையில் நீராடி சந்தோஷம் பெறும் மகானுபவர்கள் வாழும் தேவ லோகமே ஸ்டுடியோ! மடந்தைகளுக்கு கேட்கவா வேண்டும்.

ஒரு நாள் அவளுக்கு ஆகக் கூடிய செலவை ஏற்றுக் கொண்டால் ஒரு குட்டி! ஒரு குளோசப் ஷாட் வாங்கிக் கொடுத்தால் ஒரு முத்தம். கிரோயினிக்கு முக்கிய தோழியாகப் போட்டு விட்டாலோ ஒரு நாள் இரவு முழுதும் படுக்கை! மெயின் போர்ஷன் அளித்து விட்டால் போதும் குறைந்தது மூன்று மாதமாவது நிச்சயமாக அந்த நக்ஷத்திரம் நம்மிடமே இருக்கும்—சொன்ன தெல்லாம் செய்யும்—ஆனந்தமாய் ஆடும்—நம்மடி மீதே எந்நேரமும் கிடக்கும். இந்த சுவர்க்க பூமியை நேரடியாக அனுபவிக்கும் சந்

தர்ப்பம் கிடைத்தது. இந்த துரைக்கு ஒரு கும்பிடு போட்டு விட லாம் என நினைத்தேன். ஆனல் தேய்ந்து போகும் சினிமாக் கலையை செப்பனிட முடியாதா என்ற ஒரே ஆசை — அங்கே தங்கினேன்.

கண்ணெதிரே நடக்கும் காமக் களிக் கூத்தை—அட்டூழியங் களை—தினசரியும் காணுகிறேன். இங்கு வரும் மனிதன் கட்டா யம் மிருகமாகி விடுவான். எவ்வளவோ என் மனதை கெட்டிப் படுத்திக் கொண்டு வழுக்குப் பாறையில் நடந்தேன்.

என் கதைக்கு ஒத்திகை நடந்தேறியது. நாளைக்கு முதற் காட்சி "ஷூட்" ஆகப் போகிறது.

"அப்பாவுக்கு ஆபத்து" என்ற தந்தி வந்தது. சரிந்து போனேன். முதலாளி யிடம் சொல்லி விட்டு ஊருக்குக் கிளம்பினேன்.

அப்பா படுத்த படுக்கையாகக் கிடந்தார். அந்த உலுத்த ஹிருதயத்தில் மூச்சு ஓடிக் கொண்டுதான் இருந்தது.

"நான் சாகிறதுக்குள் உனக்கு கலியாணம் பண்ணிவச்சி கண் குளிர பாக்கிறதுக்கு கொடுத்து வைக்காதா" என ஈன சுரத்தில் கேட்டார் என் தந்தை.

"இன்பம் எங்கே இருக்கிறது என்று கருதி அலைகிருயோ அந்த இன்பப் பொருளைக் காணுவதற்கு அனுபவிப்பதற்கு—நீ வானத்திலே இருந்து குதித்தவ னல்ல. இதோ மரணப் படுக் கையில் தவிக்கிருரே உன் தந்தை—இவரே மூல காரணம். இவ ரின்றி நீ இந்த உலகத்திற்கு வந்திருப்பாயா? கமலாவைத்தான் கண்டிருப்பாயா? இவருடைய ஆசையை அழிக்காதே!"

என் மனச் சாட்சி இடித் துரைத்தது. "அப்பா! தைரியமா யிருங்கள். கலியாணம் செய்து கொள்கிறேன்" என்றேன். அடடா! எவ்வளவு தெளிர்ச்சி அவர் முகத்தில்! நான் திருமணத் திற்கு சம்மதித்து விட்டேன். அப்பாவின் உடலில் ஒரு புது வேகம்.

நான் திருமணத்திற்கு சம்மதம் தெரிவித்தது ஏதோ ஒரு புரட்சிகரமான மாறுதல் என்றே என் தோழர்கள் எண்ணினர். ஆயினும்......சொல்லொண்ணுத துயரப் படுகிறது என் இதயம்.

என் திருமண நாள் நெருங்கிற்று. சுற்றத்தாருக்கும்—நண்பர்களுக்கும் அழைப்பு இதழ்கள் அனுப்ப விலாசங்கள் எழுதிக் கொண்டிருந்தேன். அநேகமாய் தெரிந்த எல்லோருக்கும் எழுதினேன். திடீரென்று கமலாவுக்கு அனுப்ப வேண்டுமென்ற ஆசை பிறந்தது. அழைப்பை தபாலில் அனுப்புவது சரியா? அவ்வளவு சாமான்யமானவளா கமலா? நேரிலே அழைப்பைக் கொடுத்து அவள் மனம் ஒப்பிய வாழ்த்தை பெறுவதானல் பிற்பட்டு என் வாழ்வில் அமைதி நிலவாதா? ஆம்! அதுவே நல்லது முறையுங்கூட.

போத்தனூர் சென்றேன். நான்கு வருடங்கள் கழித்துப் பார்க்கப் போகிறேன் கமலாவை! வாசலில் போய் நின்றேன். உள்ளே அவள்—மெல்ல வருவது போவதுமாகக் காலடி சப்தம் கேட்டது. என்ன செய்கிருளோ? அவர் இருப்பாரோ? வீதியிலே பொம்மையை யாரிடமோ பறி கொடுத்த குழந்தை பீறிட்டு அழுதவாறு தன் வீட்டினுள் நுழைவது போல உள்ளே ஓடிச் சென்று கமலாவைக் கட்டிக் கொள்ள வேண்டும் போல தோன்றியது.

மெதுவாக வீட்டிற்குள் நுழைந்தேன் நான். மனதில் ஒரே குழப்பம்—கொந்தளிப்பு—போராட்டம். கமலா என்னைக் கண்டாள். அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டாள். சில நிமிடங்கள் அமைதி! கமலா என்றேன். அவள் பார்வை பக்கத்து அறைப் பக்கம் சென்றது. "அவர் இருக்கிருரே" என்று கூறுவதுபோல இருந்தது.

"இங்கு ஏன் வந்தீர்கள்?"

இக்கேள்வி என்னை தைத்தது. அவள் குரலில் கடினமல்ல இரக்கம் கலந்திருக்கிறது. மௌனமாக என் பையிலிருந்து என் திருமண அழைப்பு இதழைக் கொடுத்தேன். கை விரல்கள் ஆடின. வாங்கினுள்—பிரித்துப் பார்த்தாள். அது அவளுக்கு சாவோலையாகப் பட்டிருக்குமோ!

ஏக்கத்தோடு பார்த்தாள் என்னை. இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டே நின்ருேம்.

அவள், கையில் போட்டிருந்த மோதிர மொன்றை கழற்றி என்னிடம் கொடுத்தாள். "என் சகோதரி தங்கத்திற்கு இந்தப்

பரிசைக் கொடுங்கள்.'' என்று கூறினள். காதோடு காதாகப் பேசுவது போலவே குரல் இருந்தது. அந்நேரம் 'லொக்லொக்' என்ற இருமல் சப்தம் கேட்டது. அந்த அறைப் பக்கம் திரும்பினேன். யாரோ அணர்த்திக் கொள்வது மாதிரி கேட்டது. இடையே இருமலும் ஏற்பட்டது. அந்த அறையினுள் முத்தண்ணு.........?

''கமலா அவருக் கென்ன?''

''உடம்புக்கு சுக மில்லே.''

என் கால்கள் என்னை அறியாமலேயே அவ்வறைப் பக்கம் நடந்தன. கமலா குறுக்கே வந்து நின்று என்னைப் போக விடாமல் தடுத்தாள். என்ன செய்கிறது காய்ச்சலா? என்று கேட்டேன். ''க்ஷய ரோகம்'' என்ருள் மெல்லிய குரலில்! க்ஷய ரோகமா? என் மனம் துரித மடைந்தது. இன்பம் எங்கே என்ற நாடகத்தில் நான் தீட்டி யிருந்த வசனம் என் ஞாபகத்திற்கு வந்தது. திருப்தியற்ற வாழ்க்கை க்ஷய ரோகம் போன்றது. இதனுல் பீடிக்கப் பட்ட எவரும் உயிர் வாழ்ந்த தில்லே.

க்ஷய ரோகம்! ஆம்! கொடிய வியாதி ஆச்சே! இதனுல் பீடிக்கப்பட்டு விட்டாரே முத்தண்ணு!

என்னமோ அவரைப் பார்க்க வேண்டு மென்ற ஆசை என்னை அறைக்குள் போகச் சொன்னது. ஆனுல்......''அவரை நீங்கள் பார்க்கக் கூடாது. அவருடைய நொந்து போன மனது இன்னும் பன் மடங்கு துயரப்படும்'' என்று கெஞ்சினுள் என்னை. என் கால்களைக் கட்டிக் கொண்டு உள்ளே செல்ல வொட்டாது நிறுத்தினுள். கமலா என்னைச் சந்தேகப் படுகிருளா? முத்தண்ணுவுக்கு ஏதாவது இடையூறு செய்து விடுவேன் என்று நினைக்கிருளா? அவள் தடுக்கும்போது நான் என் உள்ளே செல்ல வேண்டும். அவர் என்னை அடித்துக் கொன்ருலும் பாதகமில்லே. அவர் காலில் விழுந்து மன்னிப்பு கேட்க வேண்டுமென எண்ணினேன். கமலா அவரைக் காணக் கூடாது என மறுக்கிருளே! அதற்குமேல் அங்கே நிற்க முடிய வில்லே. வெளியேறினேன். முத்தண்ணுவுக்கு க்ஷய ரோகம்?

# முத்தண்ணா

எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டுமேயல்லாது வேறொன்றும் அறியேன். —தாயுமானவர்.

க்ஷயரோகம்! ஆம்!! எனக்கு க்ஷய ரோகம் என்று டாக்டர் சொல்லி விட்டார். திருப்தியற்ற வாழ்க்கை க்ஷயரோகம் போன்றது. இதனால் பீடிக்கப் பட்ட எவரும் உயிர் வாழ்ந்த தில்லை, என்ற அந்த நாடக வசனத்தை அடிக்கடி என் வாய் குழறும்! என் வாழ்வும் க்ஷய ரோகம். என் உடம்பிலும் க்ஷய ரோகம். நான் இனிப் பிழைப்பேனா?

தினசரியும் டாக்டர் வருகிறார். ஏதேதோ மருந்துகள் கொடுக்கிறார். ஊசி மருந்தை ஏற்றி ஏற்றி என் புஜமெல்லாம் புண்ணானது தான் கண்ட பலன். என் வியாதி தீருவதாக இல்லை. பரிபூரணமாகத் தீர வேண்டாம். சற்று குறையவாவது கூடாதா? நாட்கள் செல்லச் செல்ல வியாதியின் வேகம் வளருகிறதே!

இப்பொழுது சலனமற்று படுக்கையில் கிடக்கிறேன். அதிக நேரமும் படுத்திருக்கவும் முடியாமல் மூச்சுத் திணறுகிறது. எழுந்து உட்கார்ந்தால் எச்சிலை உமிழ்கிறேன். மீண்டும் ஹிருதயத்தை யாரோ அமுக்குவது போன்ற உணர்வு—சளி தொண்டையை அடைக்கிறது. 'கட்கட்' என்று இருமல் எடுக்கிறது. இருமல் அதிகரிக்கும் போது நெஞ்சு வலி பொறுக்க முடியவில்லை. சுத்தியலைக் கொண்டு என் நெஞ்சை குடைவது போலத் தெரிகிறது. மூச்சு விநாடிக் கொரு தரம் நெஞ்சுக்குள் முட்டுகிறது. உபத்திரவத்தை தாங்க முடியாது தவிக்கிறேன்.

இப்பொழுது என் மீது கமலா காட்டி வருகிற பரிவை—பாராமரிப்பை முன்பே காட்டி யிருப்பாளானால் எனக்கு இக் கொடிய நோய் வந்திருக்கவே செய்யாது. அவ்வளவு தூரம் எனக்கு சிஷ்ருஷைகளை காலையிலே எழுந்து இரவு ஓயும் வரை எனக்கு அத்தனை பணிவிடைகளும் செய்கிறாள். சர்வசதாவும் என் அருகிலே அமர்ந்து விசிறிக் கொண்டே இருக்கிறாள். "கஞ்சி வேண்டுமா? நெஞ்சுக்கு ஒத்தடம் கொடுக்கட்டுமா? எப்படி இருக்கிறது? டாக்டரை அழைத்து வரட்டுமா?" என்றெல்லாம் ஏதாவது கேட்டு உபசரித்தவாறு இருக்கிறாள்.

கஞ்சியை வாயிலே ஊட்டுகிருள். திருப்தியோடு குடிக்கிறேன். இரவு நேரங்களில் என் கால்களைச் சற்று பிடித்து விடுகிருள். குழந்தையைப் போல தூங்கிப் போகிறேன் வெகு சீக்கிரத்தில்.

அவளுடைய கண் காணிப்பு எனக்கு எவ்வளவோ ஆறுதலை அளிக்கிறது. காய்ந்து சருகாய்ப் போன என் இதயத்திற்கு தென்றலாக இருக்கிறது அவள் சேவை. ஆனுல்.........என் நோய் முற்றி வருகிறதே விரோதியை வெல்ல முடியாதபோது புண்ய போதனை—கையிலே காசில்லாதபோது தர்மோபதேசம்—பேசிப் பயன் உண்டா? சாகும் நிலைமையில் எனக்கு இந்த உபசரிப்பா?

நான் இறப்பதால் கமலாவுக்கு யோகந்தானே! கலைமணியோடு வாழ நினைக்கிற அவளுக்கு என் மரணம் மகிழ்ச்சியைத் தருமே! அப்படியிருக்க எனக்கு ஏன் இத்துணை பணி விடைகள் செய்கிருள்? அடக்க ஒடுக்கமாய் நடக்கிருளேஏன்? "எப்படியிருக்கு ஸார்! கொஞ்சம் கவனமாய் பாருங்கள் சார்" என்று டாக்டரை தினசரியும் வரும் சமயமெல்லாம் கேட்கிருளே. ஏன்? என் உயிர் பிழைக்க வேண்டுமென்று ஏன் பதறுகிருள்? பெற்ற தாய் கூட என்னை இப்படி கவனிக்கமாட்டாள். என் பிடிப்பிலே கடைசி வரை இருந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கவே விரும்புகிருளோ? அல்லது கடைசி காலத்திலாவது என் மனம் கோணுமல் நடக்க முடிவு செய்திருக்கிருளா?

கமலாவின் மனப் பாங்கு எப்படியும் இருக்கலாம். என் முடிவு இதுதான் அவள், எனக்கு சேவை செய்து செய்து தன் மீது சுமத்தப்பட்டிருக்கும் பழியை போக்கி விட்டாள். தன் களங்கப்பட்ட வாழ்வை துடைக்கிருள் என் மனதை குளிரச் செய்வதின் மூலம்! அவள் வழுக்கி விழுந்து விட்டாள் அதுவும் என்தவருல் என்ற ஒரு குற்றத்தைத் தவிர வேறு எவ்விதத்திலும் அவளது தியாகத்தை நான் குறை சொல்ல மாட்டேன். அந்தக் குற்றத்தையும் இப்பொழுது மறக்கிறேன்.

ஆம்! நான் கமலாவை மன்னித்து விட்டேன். என் மன்னிப்பைப் பெற்றுக் கொண்டாள். தியாக நெருப்பிலே தன்னை புடம் போட்டு பரிசுத்தமானுள் அவள்.

கமலாவை இந்த சாகும் நேரத்திலாவது வாழ்த்துகிறேன். நான் சாகப்போவது உறுதி! அவளாவது வாழட்டும். கலைமணியுடன் கலந்துவிட்ட அவளை நான் கெடுக்காமலே பரிசுத்தமாக விட்டு விடுகிறேன். அவளுக்கு விடுதலை அளித்துவிட்டேன்.

நான் இது வரையிலே அவளை பாதுகாத்தேன். இனி சாகப்போகிறேன். அவள் எப்படிப் போனால் எனக்கென்ன? ஆனால் கலைமணியிடமே சென்று வாழ்வை நடத்தட்டும். என்னால் தடைபட்டுப் போன அவர்களுடைய அன்பு வெள்ளம் பெருகட்டும். பட்ட மரம் துளிர்க்கட்டும் என் மரணத்தால் என்ற என் ஆசையை மனந்திறந்து சொல்லுகிறேன்.

இப்பொழுது வெளி உலகை கவனிக்கிறேன். நெஞ்சை அடைக்கிறது. என்மீது யாரோ ஏறி உட்காருவது போல தோன்றுகிறது. சளி தொண்டையை கவ்வுகிறது. வீதியிலே வண்டிகளின் சப்தம் தெளிவற்று என் காதிலே விழுகிறது. ஜன்னல் வழியாகப் பார்த்தால் அந்த மின்சார விளக்கு சரியாகக் கூட என் கண்ணிலே புலப்படவில்லை.

"கமலா! எனக்கு உடம்பு ரொம்ப மோசமா யிருக்கிறது ஊருக்குத் தந்தி கொடு. கன்னியா குமரிக்கும் போய் விடலாம்"

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள் உங்களுக்கு ஒன்றும் செய்யாது."

"இல்லை கமலா! நீ உடனே தந்தி கொடு"

என்று கமலாவிடம் கூறினேன். இதைக்கூற எனக்கு எவ்வளவு சிரமமா யிருக்கிறது.

"திருப்தியற்ற வாழ்க்கை க்ஷயரோகம் போன்றது. இதனால் பீடிக்கப்பட்ட எவரும் உயிர் வாழ்ந்ததில்லை." என்று சொல்லிப் பார்க்கிறேன். இது என் காதிலே கூட விழவில்லையே! என் கழுத்தைத் இரும்பு குறடினால் நெருக்குவது போல தெரிகிறது. பழுத்தசளி உருண்டையாகத் திரண்டு என் தொண்டைக்குள் இருந்து ஏதோ செய்கிறது யார்யாரோ என்னைச் சுற்றி இருக்கிறார்கள். ஆனால் காதும் கேட்கவில்லை. கண்ணும் பஞ்சடைத்துப் போகிறது. நாவறளுகிறது. இவையெல்லாம் மரணத்தின் அறிகுறியா? என் சிந்தனையை இருள் கவ்வுகிறது. நான் விடை பெறுகிறேன். அதோ மரணம் என்னை அழைக்கிறது.

---

# கமலா

உலகத்தைப் போல பெண்ணின் இருதயம் மிகவும் விஸ்தாரமானது.
—ஷோ.

'அதோ மரணம் என்னை அழைக்கிறது' என்று அறிவிப்பது போன்று அவரது குழி விழுந்த கண்கள் காட்டின. கண் இமைகளின் அசைவும் மெள்ள மெள்ள நின்றன. டக்...டக்... என ஓடிக் கொண்டிருந்த ஹிருதய ஓட்டம் நிற்கும் நேரம். கண்களில் நீலம் பாய்ந்தது.

ஒரு பெண் அவரது கண் இமைகளை கைகளினால் அழுத்தினாள். ஐந்தாறு பேர் சேர்ந்து அவரை அப்படியே கட்டிலை விட்டு இறக்கிக் கீழே கிடத்தினர். குரல் வளைக்கும் நெஞ்சுக்கும் மத்தியிலே மரணத்தின் இறுதி மூச்சான 'கொர...கொர...' என்ற சப்தம் ஓய்ந்தது. கழுத்திலே ஒரு வெட்டு! 'களுக்' என்றொரு சப்தம்! அந்தோ முத்தண்ணாவின் உயிர் ஓடி விட்டது. ஐயோ! அம்மா, முத்தண்ணா, ஏ! கடவுளே என்ற கூக்குரல்கள் எழும்பின. சின்னம்மா முட்டி மோதினாள். அவள் அழுகை வீட்டையே ஆட்டங் கொடுக்கச் செய்தது. அப்பா கதறினார். எங்கும் அழு குரல். உற்றாரும் மற்றோரும் கூடினர். அநேகர் முத்தண்ணாவை எண்ணி அழ வில்லை. அவரவர் வீட்டில் எப்பொழுதோ இறந்து போனவர்களைப் பற்றி ஒப்பாரி வைக்கத் தொடங்கினர்.

ஆனால்......நான்......முத்தண்ணாவின் காலடியில் அமைதியாக அமர்ந்திருந்தேன். சில பெண்மணிகள் ஓடி வந்து என்னைக் கட்டி "உனக்கு இப்படியா வரணும்?" என்று சொல்லி கூக்குரல் இட்டனர். அவர்கள் பிடியி லிருந்து என்னை விடுவிக்க எவ்வளவு கஷ்டம்! நான் என்னமோ அழுது கதறிட விரும்பவில்லை. அழுது புலம்புவதால் பயன்? கலகலப்பான பேச்சைக் கொட்டும் அவரது நாக்கும்-சுழலச் சுழலப் பார்க்கும் கண் அசைவும்—விறு விறுப்பான நடை நடக்கும் கால்களும்—என்னை அடித்து அடித்து காப்பேறிப் போன கைகளும் அப்படியே ஓய்ந்து போய் கிடக்கின்றார் முத்தண்ணா! அவருக்கு நான் புலம்பினால் கேட்கப் போகிறதா? ஊரார் ஒப்பனைக்காக அழத் தேவை இல்லை என்பதே என் எண்ணம்! ஆனால் என் மனத்தில் ஏற்பட்டிருந்த ரணத்தி லிருந்து சீழ் வடிந்தது. கண்ணீர் துளிகளால் அவரது பாதத்தைக் கழுவினேன்.

ஆம்! என் தாலி — கலேமணியின் கரத்திலே கழற்றிக் கொடுத்து மீண்டும் அவரால் கட்டப்பட்ட அந்த பாசக் கயிறு அறுத் தெறியப் பட்டது.

இப்பொழுது நான் விதவை. விதவைக் குரிய சடங்கு எதையும் எற்றுக் கொள்ள மறுத்தேன். இருப்பினும் உலகோர் அறிய விதவையானேன். அன்று தாலி யிருந்தும் விதவை. இன்று தாலி இழந்த விதவை. இனி மேலாவது எனக்கு அமைதி கிடைக்காதா? எப்படிக் கிடைக்கும்? இந்த சீர் கெட்ட சமுதா யத்திலே வழுக்கி விழுந்தவள் வாழ்வ தென்றால் இலேசான காரியமா? என்றைக்கு நான் தவறினேனோ அன்று தொட்டு ஆரம்பித்து சரமாரியாக என் மீது எவப்பட்ட அஸ்திரங்கள் எத் தனை? இப்பொழுது ஊராரின் கேலிச் சிரிப்பு வலுத்தது.

நான் ஓடிப் போனவளாம்—நடத்தை பேதகமானவளாம்—விபச்சாரியாம்—இவை மட்டுமா? இவைகள் கடந்த நான்கு வரு டங்களாகக் கேட்டுக் கேட்டு புளித்துப் போன வார்த்தைகள் தானே! தற்சமயம் இதற்குமேல் ஒரு படி அதிகமாகத் தாக்கி னர். என கணவர் இறந்ததற்கு காரணம் நான் தானும். செய் வினை எவல் வைத்து என் கணவரைக் கொன்று விட்டேனும். கள்ளப் புருஷனுக்கு ஆசைப் பட்டு கட்டின புருஷனை மலையாட் டமா இருந்தவனை செய்வினை வச்சு கொன்று விட்டாயே அடி பாவி'' என்று சொல்லடி கொடுத்தனர். ஐயய்யோ! இது அநி யாயம் என்கிறேன். ஆனால், ஊரார் எற்பார்களா இதை? நைந்து போன கந்தல் துணியா என் வாழ்வு? நான் கத்தரிக் கோல்களுக் கிடையே சிக்கிய காகிதத் துண்டா? அநியாயக்காரர் களின் அவசர புத்தி—கேலிச் சிரிப்பு—ஆடிக் காற்று என்றால் நான் சிறு துரும்பா?

இல்லை! இவர்களின் மத்தியிலே இருக்கக் கூடாது. நல்ல பாம்பின் புற்றிலே தவளை இருக்கலாமா? எங்காவது ஓடி விட முடிவு செய்தேன். எங்கே போகலாம்? வேறு எங்காவது செல் வதை விட.........? இங்கே கிடந்து கஷ்டப் படுவதைக் காட் டிலும் கலேமணியைத் தேடிக் கொண்டு போகலாமே! ஆனால் அதி லுள்ள ஆபத்து? கலேமணி—தங்கம் இவர்களின் இன்ப வாழ்வில் நான் குறுக்கிடுவதா? கலேமணியின் ஹார்பரில் ஒரே கப்பல் தான் தங்க முடியும்! அது தங்கமே தான். அப்படியானால் நான்......?

என் வாழ்க்கை உடைந்து போன கண்ணாடிக் கிளாஸ் அல்ல! பழுதான பித்தளைப் பாத்திரமே! அதன் நெளிவு சுளுவுகளை எடுத்து விடுவது கலைமணிதானே! ஆனால் அவர் இன்று கலியாணமானவர். அவரிடம் நான் சொல்லுவதற்கும் அருகதை யற்றவள். சரி! என் வாழ்வின் முடிவுதான் என்ன? இராஜ குமாரை ஆளாக்கி வாழ வைக்கும் வரையிலே நான் வாழத் தான் வேண்டும்.

கடைசியாக எங்காவது வேலை தேடிப் போவது எனத் தீர் மானித்தேன். திருச்சி முனிசிபல் ஆரம்பப் பாடசாலை யொன் றில் உபாத்தியாயினி வேலை காலி இருப்பதாக செய்தித் தாள் வாயிலாக அறிந்தேன். மனு எழுதிப் போட்டேன்.

இரண்டு தினங்களிலேயே அழைப்பு வந்தது. திருச்சி சென்றேன். அந்தப் பள்ளிக்கூடத்திலேயே எனக்குத் தேர்வும் கிடைத்தது. பள்ளித் தலைமை ஆசிரியையின் உதவியால் பள்ளிப் பக்கத்திலேயே வீடும் பார்த்தேன்.

நான் திருச்சிக்கு வந்து விட்டது கன்யாகுமரியில் அப்பா வுக்கு கூடத் தெரியாது. எவருக்கும் தெரியாமல் என் இராஜ குமாருடன் ஓடி வந்து விட்டேன். எதற்காக நான் சொல்லி விட்டு வர வேண்டும். நான் தான் கள்ளப் புருஷனுக்காக கட்டிய புருஷனை கொன்றவளாச்சே! கல்லானாலும் கணவன்—புல்லானா லும் புருஷன் என்பதை உணராத ஓடிப் போனவளாச்சே! என் னைப் பற்றி யாருக்கு என்ன கவலை?

இங்கு இராஜன் இருப்பான். அவன் சற்று ஆறுதலாக இருப்பான் என்று எண்ணினேன். ஆனால் அவன் ஏதோ ஒரு வேலைக்காக ஊட்டி போயிருக்கிறானும். என் வாழ் வெங்கும் கிளம்பிக் கொண்டிருக்கும் ஏமாற்ற எதிரொலியில் இது ஒரு சிறு அலைதானே!

எப்படியோ என் தனிக் குடித்தனத்தைத் துவக்கினேன். பையனைப் போஷிக்கவும்—வீட்டு வேலைகளை கவனிக்கவும்—சமையல் தயாரிக்கவும் ஒரு வேலைக்காரியை அமர்த்தினேன். காலையி லிருந்து மாலை வரை குழந்தைகளிடையே பழகி உலகை மறக்க முயலுகிறேன். ஒழிந்த நேரங்கள் மிகவும் சொற்பம். கலைமணியின் நினைவை—முத்தண்ணாவின் மரணத்தை ஒரு பக்க மாக பூட்டி விட்டு காலமும் கழிகிறது. எண்ணற்ற இளம் விதவை

கள் தமது உள்ளப் புயல்களையும் உணர்ச்சிக் கொந்தளிப்பையும் ஒருவாறு அடக்கி வைத்து வாழும் நமது சமுதாயத்தில்......நான் ......? கலைமணியோடு வாழ்ந்த சில மணி நேரங்களைத் தவிர இதுவரை விதவையாகத் தானே வாழ்ந் திருக்கிறேன்! இனி என் வாழ்வின் சில வருடங்களைக் கழிப்பது கடினமா? அவர்—கலை மணி என் வாழ்க்கையை விட்டு வெகு தொலைவில் சென்று விட்டார். மிஞ்சி இருப்ப தெல்லாம் வேதனையோடு கலந்த ஒருவித இன்ப நினைவு! அதுவும் கூட விரைவில் மறையப் போகும் தூரத்துக் கப்பலின் பாய் மரம்!

நள்ளிரவு நேரம்! தையல் மிஷினில் ஒரு சட்டை தைத்துக் கொண் டிருந்தேன். நாளை விடுமுறை தினம். ஆதலால் இரவு வெகு நேரமாகியும் தையல் வேலையில் மும்மரமாக ஈடுபட் டிருந் தேன். எங்கும் நிசப்தம்! வீட்டின் எங்கோ ஒரு மூலையி லிருந்து கொண்டு ஒரு வண்டு கிச்சு கிச்சு என்று கத்தி இரவின் அமை தியை நினை வூட்டியது. தூரத்து மர மொன்றில் பட்சிகள் சிறகை அடித்துக் கொண்டன. கால்கள் சற்று வலித்தன. கை விரல்களில் 'சுடக்கு' போட்டவாறு உடம்பை நெளித்துக் கொடுத்தேன்.

என் பார்வை தூக்கத்திலிருக்கும் என் மகன் இராஜகுமார் மீது சென்றது. நல்ல தூக்கத்தில் கிடந்தான். அப்போது தன் உதடுகளைக் கிழித்து முத்துப் பற்களைக் காட்டினான். யாருடனோ என்னவோ பேசினான். ஏதோ கனவு காணுகிறான் போலும்! தன் உடலை அசைத்து புரண்டு படுத்தவன் திடீரென்று விழித்து சுற்றும் முற்றும் பார்த்தான். "என்னடா கண்ணு" என்றேன். பேந்தப் பேந்த விழித்தான். கனவில் எதையாவது பறி கொடுத்து விட்டானோ? "அம்மாவை யாரோ அடிக்கிறாங்க" என் றான் அழுங் குரலில்!

"அம்மா இதோ இருக்கேனே! என்னை யாரும் அடிக்கலே" என்று அவனைச் சமாதானப் படுத்தினேன்.

"உன்னை யில்லே! அந்த எதிர்த்த வீட்டு அம்மாவை" என் றான் இராஜகுமார்.

எதிர்த்த வீட்டு அம்மாவா? அவள் யார்? என் மனம் பகீர் என்றது. அவனை அப்படியே அணைத்துக் கொண்டு படுத்தேன். கனவினால் பேதளித்துப்போ யிருக்கும் அவன் சின்னஞ் சிறு

மனதை என் பாசப் பிணைப்பு போக்கி விடாதா? இல்லை! அவன் மீண்டும் முணங்கினன். "என்னை அம்மா கிட்டே கொண்டு விடு'' என்று ஆரம்பித்தான். விடியட்டும் விடியட்டும் என்று பல முறைகள் சொல்லிப் பார்த்தேன். ஆனல் அவன் அடம் பிடித்தான். எனக்குக் கோபம் வந்து விட்டது! ஓங்கி ஒரு அறை கொடுத்தேன். "வீர்'' எனக் கதறினன். உரக்க அழுதான். பாவம்! நான்—பொல்லாதவள். குழந்தை மனத்தின் பிடிவாதம் அறியாத பேதை! அடி விழுந்த இடம்—அவன் எளிய கன்னம் வீங்கிப் போயிற்று. என் விரல்களின் அச்சு அப்படியே அங்கே பதிந்திருந்தது. அதைப் பார்த்தவுடன் பெற்ற மனம் பற்றி எரிந்தது. வேறு யாரும் இப்படி அடித் திருந்தால் அவர்களை இதற்குள் சும்மா விடுவேனு?

அவனை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டு நானும் அழுதேன். அவன் ஏங்கி ஏங்கி அழுதான். சற்று நேரத்தில் என் அரவணைப்பால் அயர்ந்து தூங்கிப் போனன்.

என் செல்வத்தை அந்த அம்மாள் அபகரித்து விட்டாளா? அந்த அம்மா—அம்மா என்று என் மகன் உயிரை விடுகிருனே! என் மகனின் குழந்தை மனத்தை கவர்ந்திருக்கிருளே! என் மகனும் தன் ஆசை யெல்லாம் அந்த அம்மா மீது கொட்டுகிருனே! அவனை வீட்டிலே விட்டு விட்டு பள்ளிக்குச் சென்றவுடன் எதிர்த்த வீட்டிலேயே எந்நேரமும் கிடப்பானுமே! குழந்தை உள்ளத்தில் இப்பொழுது படிய ஆரம்பிக்கும் இந்த பாசப் பிணைப்பு—கல் மேல் தீட்டப் படும் சிற்பம் அல்லவா! அப்படியானல் என் செல்வன் என்னை விட்டு நழுவி விடுவானு? இவ்வளவு தூரம் என் மகனை சுவீகரித்துக் கொண்ட அந்த அம்மாள் யார்?

என் மகனின் பரிபூரண அன்பைப் பெற்ற அந்த எதிரியின் பலத்தை உணர்ந்தால் தானே வெற்றி—தோல்வியைப் பற்றி நிர்ணயிக்க முடியும்—என தீர்மானித்தேன். பையனை கையில் பிடித்துக் கொண்டு அந்த எதிர்த்த வீட்டிற்கு போனேன்.

அதி விசாலமான வீடு—கண்ணுடிப் படங்கள்—இயற்கைக் காட்சிகள் வீட்டின் சுவர்களை அலங்கரித் திருந்தன. நிலைக் கண்ணுடி பதித்த நீளமான பீரோ.—அதன் மீது ஒரு மலர் கொத்து வைக்கப்பட் டிருந்தது. ஒரு மூலையில் மேஜை—நாற்காலி......!

அந்த மேஜை மீது.........என் கால் வாசலின் நிலைப் படியில் தட்டித் தடுமாறியது. நகக் கண்ணில் இரத்தம் பீறிட்டது. கண் தெரியாத கடும் இருளில் கானகத்து மரத்தில் மோதி விட்டேனா?

ஆம்! அங்கே—மேஜை மீது—கலைமணியின் "போட்டோ" சிரித்தவாறு வணக்கம் செலுத்திக் கொண் டிருந்தார் அந்தப் படத்தில். சடாரென்று திரும்பி விட நினைத்து நகர்ந்தேன். அதற்குள்...அந்த அம்மாள் சமையலறைக்குள்ளிருந்து வெளியே வந்து விட்டாள் "வாடா கண்ணு!" என்று சொல்லி என் மகனை வாரி அணைத்துக் கொண்டாள். அதன் பிறகு தான் என்னை ஏறிட்டுப் பார்த்தாள். "அக்கா! வாருங்கள் வாங்க" என வரவேற்றாள். என் கால்களில் வடியும் இரத்தத்தைப் பார்த்தவுடன்—ஓடிச் சென்று அரை நொடியில் ஈரத்துணி கொண்டு வந்தாள் அந்த அம்மாள்! அவளை நான் எங்கோ பார்த்திருக்கிறேன்.

சில நிமிடங்கள் சென்றன. என் சிந்தனையை ஸ்திரப் படுத்தி பார்த்தேன். ஏதோ ஒரு இடத்தில் சந்தித்ததாக நினைவிருக்கிறதே தவிர சரியாகப் புலப்படாமல் திகைத்தேன். என் காலில் பட்ட ரணத்திற்கு ஈரத்துணி கட்டினாள் அந்த அம்மாள்.

"அக்கா! இப்படி உட்காருங்கள்."

"என் மகன் இங்கு அடிக்கடி வருவானாமே உங்களைப் பார்க்காமல் ஒரு நிமிடங் கூட இருக்க மாட்டான்போலிருக்கே, பொழுது விடிஞ்சதிலிருந்து சும்மாவும் நச்சரித்துக் கொண்டே இருக்கான். அவனையும் கொண்டு வந்து விட்டு விட்டு உங்களையும் பார்த்துட்டுப் போகலாமேன்னு வந்தேன்."

"இந்த நல்ல நாளை நானும் ரொம்ப நாளாய் எதிர் பார்த்துக் கிட்டே இருந்தேன்."

"என்னைத் தெரியுமா உங்களுக்கு?"

பள்ளிக்கூடத்துக்கு போற வர்ற சமயத்திலே இங்கே இருந்து பார்த்துக்குவேன்."

"நீங்க வெளியே தலையை நீட்ட கூட மாட்டீர்களா?"

"நான் உங்களே பார்த்ததே கிடையாது இந்த வீட்டிலே'"

"ஆமா! நீங்கள் ஏன் வெளியே நடமாடுகிறதே கிடையாது?"

"நான் விதவை. வாழ்வை இழந்தவள்"

"உங்கள் கணவர்.........?"

"சுகமாய் இருக்கிறார். இதோ மாங்கல்யமும் இருக்கு. ஆனல் எனக்கும் விதவைக்கும் வித்தியாசமே கிடையாது."

என் மனத்தில் ஓராயிரம் ஈட்டிகள் ஒருங்கே பாய்வதுபோல் இருந்தது. ஆருத ரணத்தில் கத்தியை வைத்தால்......? ஐயோ! வேதனை! வேதனை!! சகிக்க முடியாத வேதனை!!! எப்படிப் பட்ட இல்லறப் பட்டினியால் நான் வாடிக் கிடந்தேனே—அப்படிப் பட்ட இல்லறப் பட்டினியா இந்த அம்மாளுக்கும்! இக் கோரப் பசி தானே என்னை அலே மோதச் செய்தது—கலைமணியை கொண்டு வரச் செய்தது. ஐய்யோ......இந்த நோய் கொடிது! கொடிது!!

"அக்கா! ஏன் ஒரு மாதிரியாகப் போய் விட்டீர்கள்?"

"ஒன்று மில்லையே."

"நீங்களும் விதவையா?"

"ஆம்! அதே ஒரு பெரிய கதை. உம்......அது கிடக்கட்டும். உங்கள் கணவர் யார்?"

"அதோ" என்று சுட்டிக் காட்டினள் அந்த அம்மாள் கலைமணியின் போட்டோவை! சரி! நான் நினைத்ததும் சரியாகப் போயிற்று. "உங்கள் பெயர்?" என்று கேட்டேன். "தங்கம்" என்றாள் அந்த அம்மாள்! அக்கினி திராவகத்தை என் மீது ஊற்றினாள்......? ஆம்! அந்த அம்மாள் தங்கமே தான்.

# தங்கம்

உப்பு சாரமற்று போனுல் எதனுல்
சார மாக்கப் படும்?—ஏசு கிறிஸ்து

ஆம்! என் பெயர் தங்கமேதான். அழகான பெயர்! செல்லப் பெயர்! ஆனுல் என் வாழ்க்கை தங்க மல்ல! சாதாரண மண் சட்டி! அதுவுங் கூட அரை குறையாக சுட்ட சட்டி! குயவனுல் படைக்கப் படும் மண் பாண்டங்கள் எல்லாமே பாக்கியம் பெறுகிறதா? அவைகளில் குளிர் நீர் ஊற்றவும்—சமையல் ஆக்கவும், பண்டங்கள் வைக்கவும்—கஞ்சி கொண்டு போகவும்—இன்னும் சில செத்தவர்களுக்கு கொள்ளிக் குடமாகவும்—இப்படிப் பலவாறு பயன் படுகின்றன! ஆனுல்......அரை குறையான வேக்காட்டில் சுட்ட சட்டி எதற்குப் பயன் படும்? மூலையில் கிடக்க வேண்டியது தானே!

என் பெயரைச் சொன்ன வுடன் அந்த அக்காளின் முகம் ஒருக் கணத்தில் மாறியது. என்? என்னை எக்கத்தோடு பார்த்தார்கள். என் கணவரின் படத்தைக் காட்டியபோது அவர்கள் உடல் புல்லரித்து இருக்குமோ? என்னையும் அந்தப் படத்தையும் மாறி மாறி பார்த்தார்கள். வழி தவறிய ஆடு சிங்கத்தின் குகைக்குள் நுழைந்து விட்டால் மிரள மிரள விழிக்காதா? அக்காளின் பார்வையும் ரொம்பப் பரிதாபமாக இருந்தது. "அக்கா அக்கா" என்று நான் அழைக்க அழைக்க அதைக் காதிலே வாங்கிக் கொள்ளாமல் போய் விட்டார்கள். என்? என் பெயரிலும்—என் கணவரின் போட்டோவிலும் அப்படி என்னத்தைக் கண்டிருக்கிருர்கள். என் துயரத்தை சொல்லி அழுது பொழுதைக் கழிக்க அக்காள் துணையானுர்களே என்று நினைத்தேன். அதற்கு மாருக எனது அறிமுகம் அவர்களை அளவிலா துக்கத்தில் ஆழ்த்தி இருக்குமா?

இராஜகுமார் பொம்மையோடு விளையாடிக் கொண் டிருந்தான். அருகில் சென்று அவனை மடி மீது அமர்த்திக் கொண்டு "உங்க அப்பா எங்கேடா இராஜா" என்று கேட்டேன். "எனக்கு அப்பா இல்லே" என்ருன்! இதனுல்தான் அவர்கள் மனம் பதறியிருக்குமோ! எதற்கும் இனிமேல் வரும்போது பூரணமாய்த் தெரிந்து கொள்ள இயலாததது என்ன?

* * *

மறு நாள் மாலை அக்காள் வந்தார்கள்! ஊர் புரணி அடுத்த வீடுகளைப் பற்றி வம் பளக்க வில்லை நாங்கள். வாழ்க்கை என்றால் என்ன என்பதைப் பற்றி அக்காள் ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தார்கள். வயது முதிர்ந்த பாட்டிகளுக்குக் கூட இவ்வளவு அனுபவ மிருக்காது.

"தங்கம்! உன் கணவர் இங்கு வருவதே கிடையாதா?" என்று கேட்டார்கள் அக்காள்.

"எப்பொழுதாவது வருவார்—போவார். வீட்டுச் செலவுக்கு நிறையப் பணம் கொடுத்து விட்டுப் போய் விடுவார். சினிமா ஸ்டுடியோவில் கூத்தாடிச்சிகளுடன் குஷாலாய் இருக்கிறவருக்கு வீட்டின் நினைவு வருமா அக்கா?"

"தங்கம்! ஆண்களை இப்படி சுலபமாக சந்தேகப்படுவதால் தான் அவர்கள் போக்கும் மாறி விடுகிறது. உன் கணவர் அவ்வளவு மோசமானவர் என்று உறுதியாய்த் தெரியுமா?"

"பிறகு ஏன் என்னை இப்படி வாடவிட்டிருக்கிறார்? அக்கா! உங்களிடம் ஏன் மறைக்க வேண்டும்? மனம் விட்டே பேசுகிறேன். அவர்—என் கணவர்–என்னைத் தொட்டதுகூடக் கிடையாது".

"இதற்குக் காரணம் என்ன தெரியுமா?"

"ஆசைக்கு ஆயிரம் பேர்கள் அவருக்கு கிடைக்கிறார்களே"

"இதற்கு ஆதாரம் ஏதம்மா! அவர் உன்னை மனப்பூர்வமாக திருமணம் செய்து கொண்டாரா?"

"இல்லை! வேண்டா வெறுப்பாகத்தான் கட்டிக் கொண்டார். அந்தச் சமயம் அவருக்கு ஒரு காதலி–அவள் உங்களைப் போலவே இருப்பாள் அக்கா! அவள் பெயரும் கமலாதான். அவளுடைய மையலில் கிடந்த அவர் என்னை முதலில் கட்டிக்கொள்ள மறுத்தார். பிறகு எப்படியோ என்னை மனைவியாக்கினார்....ஊரார் மெச்ச கணவன்–மனைவி–ஆனால் நானும் அவரும் கீரியும் பாம்பும்போல வாழ்கிறோம்."

"தங்கம்! நாழியாகி விட்டது. மீதியை நாளைக்கு பேசிக் கொள்வோம்" என்று சொல்லிவிட்டு எழுந்தார்கள் அக்காள் கமலா. என் துயரக்கதை அவர்கள் மனதை உருக்கியிருக்க வேண்டும். இல்லாவிடில் கண்ணீர் உகுப்பார்களா?

தினசரியும் கமலா அக்காளுடன் ஒழிந்த வேளைகளைப் போக்கினேன். ஒருநாள் தவறினாலும் என் மனம் கேட்காது. அவர்களுடைய பேட்டி ஒருநாள் தப்பினால் அன்று பூராவும் எனக்கு பொழுதே போகாது.

ஒருநாள் ஞாயிற்றுக்கிழமை! எனக்காக "இலை அப்பம்" தயாரித்துக் கொண்டு வந்தார்கள் அக்காள் கமலா! அந்தப் பல காரம் இதுவரை நான் சாப்பிட்டதே கிடையாது. பலாச்சுளை—சர்க்கரை—கடலைப் பருப்பு—இன்னும் என்னென்னவோ கலந்து அரிசி மாவில் பொதித்து அவித்திருந்தார்கள். தின்னத் தின்ன சுவையாக இருந்தது. சாப்பிட்டு முடிந்தவுடன் இரவு பத்து மணி வரை தாயம் ஆடிக்கொண் டிருந்தோம் இருவரும். இராஜகுமார் அருகில் கிடந்த கட்டிலில் தூங்கி விட்டான். படுத்தவாறு சோவியை உருட்டியவாறு மெள்ள கண்ணை மூடினார்கள். "அக்கா! தூக்கமா? உங்கள் காய் இதோ அடிபடப் போகிறது" என்று உஷார் கொடுத்தேன். நல்ல தூக்கம் போலும்! அப்படியே சாய்ந்து தூங்கினார்கள். நானும் விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தேன்.

சிறிது நேரம் கழிந்தது. வீட்டு வாசலில் "பிளசர்" வந்து நிற்கும் சப்தம் கேட்டது. "தங்கம்! தங்கம்!" என்று கதவைத் தட்டினார் யாரோ அல்ல என் கணவர்தான்! எழுந்து சென்று கதவைத் திறந்தேன். வேகமாக வீட்டிற்குள் வந்து மின்சாரப் பொத்தானை அழுத்தினார் அவர். கீழே படுத்திருக்கும் கமலா அக்காளைப் பார்த்தவுடன்...... ஆம்! திகைத்து நிற்பதுபோல ......காணப்பட்டார். இராஜகுமாரையும் திரும்பிப் பார்த்தார். இவர்களைத் தெரியுமா இவருக்கு? என் இவர்களைப் பார்த்த வுடனே கல்லைப்போல நிற்கிறார். ஒருவேளை அக்காள்தான் அந்தக் கமலாவாக இருக்குமோ!

எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. பிறகு எப்படியோ சமாளித் துக்கொண்டு "சாப்பிடவாங்க" என்றேன். சாதத்திற்கு தண்ணீர் ஊற்றிவிட்டேன். ஆயினும் அவரைச் சாப்பிட அழைத்தேன். அவர் வேண்டாம் என்று சொன்னார். அப்புறம் "இந்த அம்மாள் யார்? தொட்டிலில் யார்?" என்று கேட்டார். "எதிர்த்த வீட் டில் குடியிருக்காங்க. ரொம்ப நல்ல மாதிரி......" சரி சரி என்று சொல்லிவிட்டு படுக்கையை எடுத்துக்கொண்டு வெளி வராந்தா வுக்குப் போனார். இது எனக்கு ஆச்சரியமா? அவர் வரும்போ

தெல்லாம் இப்படித்தானே! எனக்கு தனிமைதான் கொடுத்து வைத்திருக்கிறது. அதற்கு நான் யாரைக் குறை சொல்லுவேன்.

"உப்பு சாரமற்றுப் போனல் எதனல் சாரமாக்கப்படும்? வெளியே கொட்டப்படுவதற்கும் மனுஷரால் மிதிக்கப்படுவதற்குமே ஒழிய வேறென்றுக்கும் உதவாது" என்று இயேசுபிரான் கூறி இருப்பதாக அக்காள் கமலா அடிக்கடி கூறுவதுண்டு என்னிடம். நான் சாரமற்றுப்போன உப்புதானு? "எனக்கு இன்பம் எங்கே?" என்று என்னை நானே கேட்டுக்கொண்டே படுத்தேன். ஆம்! என் இன்பம் அதோ வெளி வராந்தாவில்......என்றது ஆசை! ஒரு பெண் வெட்கத்தை விட்டு அவரிடம் முறையிடுவதா? கண்ணீர் வடிப்பதும்—பெருமூச்சு விடுவதும் தான் நான் கண்ட பலனு? தூக்கத்தை வரவழைக்க எவ்வளவு சிரமமா யிருக்கிறது.

* * *

பொழுது முழுதும் புலரவில்லை. படுக்கையினின்றும் எழுந்தேன். பாத்திரங்களை விளக்கி வைத்துவிட்டு பலகாரம் தயாரிக்கலாம் என்ற எண்ணத்தோடு எழுந்த நான்......அக்காள் படுத்திருந்த இடத்தைப் பார்த்தேன். வீட்டுக்குப் போயிருப்பார்களோ? வெளிவராந்தாவுக்கு வந்தேன். என்னை தூக்கிவாரிப் போட்டது. திடுக்கிட்டேன். அவரையும் காணும். படுக்கையும், சிகரெட்டும், தீப்பெட்டியும் அப்படி அப்படியே கிடந்தன. இருவரும் எங்கே போனர்கள்? நான் சந்தேகப்பட்டது சரிதானு? அக்காள்—கமலா—என் கணவரின் காதலிதானு? என்னையும் என் கணவரையும் இன்றுவரை நெருங்க ஒட்டாது வைத்திருக்கும் அந்த மாயத்தின் மூடுமந்திரம் அக்காளா? அவள் என்மீது காட்டிய அன்பு பூராவும் நயவஞ்சகமா? நான் அவரை இழந்து விடுவேனு? அக்காள் என் வாழ்வில் சனியனக என் இந்தத் தெருவிற்கு வந்தாள்? அங்கே—அக்காள் வீட்டுக்குத் தான் இருவரும் போயிருப்பார்கள் எனச் சந்தேகம் கொண்டேன்.

கமலாவின் வீட்டிற்குள் நுழைந்தேன். பேச்சுக் குரல் கேட்டது. அந்த அறையின் ஜன்னலோரமாக நின்று உற்றுக் கேட்டேன். வெடிகுண்டு விழுந்த கட்டிடம் சரிவதுபோல என் மனம் மடமடவென்று சரிந்தது.

# கமலா

ஆண்கள் தியாகத்தில் வானம் என்றால் பெண்கள் வானத்தை வாழச் செய்யும் வைராக்கியம். —அறிஞர் வ. ரா.

என் மனம் மடமடவென்று சரிந்தது. நல்ல தூக்கத்தி லிருந்த என்னை யாரோ தொடுவதுபோல உணர்ந்தேன் நான். இமைகளைத் திறந்தேன். ஜன்னல் வெளியாக வீசிக்கொண் டிருந்த நிலா வெளிச்சத்தில் கலைமணியைக் கண்டேன். என்னை ஏக்கம் கலந்த சாயலுடன் பார்த்துக் கொண்டே அமர்ந்தார். அவருக்கு என்ன நினைவோ......? இந்த நிலையில் எங்களைத் தங்கம் பார்த்து விடுவாளானால்......? சடக்கென்று எழுந்து என் வீட்டுக் குள் ஓடோடியும் வந்தேன்.

அவரும் என் பின்னோடு வந்திருக்கிறார். என் அறையின் வாசற்படியில் நின்று கொண்டார். அவரிடம் போய் பேசவேண்டு மென்று ஏதோ என் பிடரியை பிடித்து உந்தும். போவேன். பிறகு பாதியில் தைரியம் என்னை கைவிட்டுவிடும். திரும்புவேன். இப்படி எத்தனை தடவை நடந்தேனோ? யாராவது பார்த்திருந் தால் பித்துப் பிடித்தவள் என்றுதான் சொல்லுவார்கள். நல்ல வேளையாக அந்தச் சமயம் வீட்டில் வேலைக்காரிகூட இல்லை. துணிந்து அறைக் கதவைப் பிடித்துக்கொண்டு............அவரை ஏதோ கேட்டேன். எறிட்டுப் பார்த்தார். அந்தப் பார்வையில் தான் எவ்வளவு ஏமாற்றம். ஐயோ இந்தப் பூமி வெடித்து அப் படியே என்னை விழுங்கி விடக்கூடாதா! ஆனால் அவருடன் உரையாட வேண்டும் என்ற ஒருவித தீவிரப் பசி. தலை சுற்றியது. அதற்குமேல் என்ன நடந்ததோ.....? நினைவு வந்ததும் அவர் மார்பில் நான் சாய்ந்திருப்பதை உணர்ந்தேன். அவர் கைகள் என்னை சிறைப்படுத்தியிருந்தன. உஸ்! என் கைகளும் அவர் கழுத்தைக் கட்டிக்கொண் டிருந்தன. எதிர்பாராத இந்தச் சந்திப்பு ......என்னை இப்படி ஒரு நொடியில் மயக்கிவிட்டது. அவருடைய அதரங்கள் என் இதழ்களின் இனிமையைப் பருகிக்கொண்டு...

சே! இச் செய்கையை—நிகழ்ச்சியை தங்கம் கண்டுவிட்டால் .........என்ன நினைப்பாள்? அவள் மனம் சரிந்து விடாதா? எழுந்தேன் அவர் பிடியினின்றும்.

“கமலா! இதுதான் நமது வாழ்வா? உன்னை இந்த நிலைமை யிலா நான் பார்க்க வேண்டும்?”

"அன்.........உம்......அந்த உரிமைதான் எனக்கில்லையே. நான் ஏன் உங்களை அன்பரே என்று அழைக்க வேண்டும்? என் நிலைமை .....அது கடவுளின் சித்தம்."

"கடவுள்! இது பித்தர்களின் பிதற்றல். ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டோர் ஏமாளிகளுக்குக் கற்றுக்கொடுத்த பாடம். கமலா! ஒரு பாவமறியாத உன்னை விபச்சாரி என்று தூற்றச் செய்து இன்று விதவையாக்கி இருப்பதும் கடவுளின் சித்தம்- விதியின் விளையாடல் என்றால் இனி நாம் விதவா விவாகம் புரிந்து வாழப் போவதும் கடவுளின் சித்தம் தான்......."

என்று சொல்லியவாறு என் அருகில் நெருங்கி வரலானார். அப்போது தங்கத்தின் பாவ பிம்பம் என் மனக் கண்முன் தோற்ற மளித்தது. இரண்டடி எட்டி நின்றேன்.

"இன்று நான் விதவைதான். தங்களை மணந்து கொள்ள லாம். எவரும் தடுக்க மாட்டார்கள். ஆனால்.........தங்கத்தின் கதி.........? என் சுயநலத்திற்காக சுக வாழ்வுக்காக—என் சகோதரியின் வாழ்வை கசக்கி எறிவதா?

"கமலா! நீ விரும்பினால் அவளும் நம்மோடு இருந்துவிட்டுப் போகிறாள்."

"முடியுமா? நடக்கக் கூடியதா? ஒரு கம்பத்தில் இரு யானை களா? நீங்களும் – நானும் ஒப்பலாம். ஆனால் எந்தப் பெண்ணாவது தன்கணவரை மனதைக் கவர்ந்தவரை மாற்றானுக்கு விலைக்குவிற்க சம்மதிப்பாளா? வேண்டாம்! அன்பை இருகூறுக்க நான் ஒறுப் படமாட்டேன். என் சகோதரியின் வாழ்வு என்னால் சீரழியவா? வேண்டாம்! என் சகோதரியும் நீங்களும் வாழவேண்டும். நான் கண்டு மகிழ்வேன். இந்த ஒரு இன்பமே போதும். அன்பே! இதனால் உங்களை புறக்கணிக்கிறேன் என்று எண்ணாதீர்கள். என் சகோதரி தங்கத்தின் வாழ்வுக்காக உங்களிடம் நான் பிச்சை கேட்கிறேன். கடந்ததை மறந்து விடுங்கள். என் சகோதரியின் வாழ்வை சுடுகாடாக்காதீர்கள். பூக்காடாக மணக்கச் செய்யுங்கள். இல்லறப் பசியால் தங்கத்தைத் தவிக்க விடாதீர்கள். அவள் தான் குடும்ப விளக்கு! அவள் வாழ்வை சுடர் விட்டு எரியச் செய்யுங் கள். அவள் வாழ்வுக்காக உங்களை—என் இதயத்தை தத்தம் செய்கிறேன். என்மீது நீங்கள் காட்டிவந்த காதல் உண்மையான தாக இருக்குமானால் உங்களுக்கே இதுவரை சொந்தமாயிருந்த கமலா கட்டளையிடுகிறாள் தங்கத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.

இன்பம் எங்கே என்று என்னை கேட்காதீர்கள். என் சகோதரி—தங்கம்! ஆம்! அவளும் இன்பம் எங்கே என்று கேட்டுத் துடிக்கிருள். அங்கே அவளிடம் போங்கள். அவளை இன்பப் பூங்காவுக்கு அழையுங்கள். இன்ப இல்லறத்தில் நுழையுங்கள். மறக்காதீர்கள். கமலா உங்கள் காலைப் பிடித்துக் கெஞ்சுகிருள்''.

கலைமணியின் காலைக் கட்டிக் கொண்டேன். கண்ணீரால் அவர் பாதங்களைக் கழுவினேன். மன்ருடினேன். என் சகோதரியின் சுக வாழ்வுக்காக என் கலைமணியை மனப்பூர்வமாக இழக்கப்போகிறேன். ஆம்! இரண்டொரு துளி கண்ணீர் சிதறி என் மார்பகத்தில் விழுந்தது. கழுத்தை உயர்த்தி அவரைப் பார்த்தேன். அவர் கண்கள் நீர்த் துளிகளை வர்ஷித்தன.

எழுந்து நின்றேன். என் கைகளால் அவருடைய கண்ணீர்த் துளிகளை துடைத்து விட்டேன்.

அவர் ஆவேசத்துடன் என்னைக் கட்டித் தழுவிக்கொண்டார். "கமலா! உன் கட்டளையை மறுக்கவில்லை. ஏற்றுக்கொண்டேன். ஆனல் ஒரே ஜீவ முத்தம்......கடைசி முத்தம்......'' என்று கேட்டார். அவருக்கு நான் கடைசியாகக் கொடுக்கும் விடை அதுதானு? என் பேச்சை ஏற்றுக்கொண்டார். என் சகோதரி வாழ்வு இன்றே மலரப் போகிறது. அதற்காக அணையப்போகும் விளக்கு இறுதியாகச் சுடர் பெருக்குவதில்லையா? ஆம்! என் இதழ்களை அவரிடம் சில விநாடி நேரம்...... ஒப்படைத்தேன். ஒரே ஒரு முத்திரை பதித்தார். என்னிடம் அவருக்கு எவ்வளவு பற்று—வாஞ்சை!

அவர் வீட்டை விட்டு வெளியேறினர்.

மறுநாள் சாயங்காலம் இரவு ஏழு மணி இருக்கும்: மங்கிய விளக்கொளி! அதன் அடியில் அமர்ந்து அரிசியில் கிடந்த கற்களைப் பொறுக்கிக்கொண் டிருந்தேன். அந்நேரம் தங்கம் வந்தாள். நான் எதிர்பார்க்கவேயில்லை. அவள் என் காலடியில் வீழ்ந்தாள். இறுகக் கட்டிக்கொண்டாள் என் கால்களை. நானும் எழுந்தேன். அவளையும் மெதுவாகத் தூக்கி நிறுத்தினேன். மீண்டும் ஆவிக் கட்டினுள் என்னை!

"என்ன தங்கம்?''

"அக்கா! அக்காள் என்றல் நீங்கள்தான் அக்காள். இழந்த இன்பத்தை தேடிக்கொடுத்த நீங்கள்தான் எனக்குத் தெய்வம்''

"தங்கம்! என் சகோதரிக்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்தேன்."

"உங்களுக்கே உடைமையான என் கணவரை எனக்களித்த கடமையை எவ்வாறு மறப்பேன். ஒரு நொடியில் உங்கள் நியாய வாதத்தினுல் அவர் மனதை எவ்வளவு சுலபமாக மாற்றிவிட்டீர்கள். நேற்று உங்களுக்கும் அவருக்கும் நடந்த பேச்சு வார்த்தை பூராவும் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். அதற்குப் பிறகு வீட்டுக்கு வந்தார். என் மார்பிலே இழைந்தாடும் பொற்சரடாக கூட அல்ல ஹிருதயத்துக்குள்ளே ஒலிக்கும் ஒலியானுர். தங்கம் ...தங்கம் என்று இதற்குள் எத்தனை தடவைகள் அழைத்துவிட்டார். இது வேண்டுமா? அது வேண்டுமா என்று எப்படியெல்லாம் உபசரிக்கிருர். அக்கா! நேற்று இரவு............ பெண்மைப் படைப்பின் லட்சியத்தைப் பெற்றுவிட்டேன். இன்பம் எங்கே என்ற கேள்விக்கு விடை கண்டேன். ஆனுல்......அக்கா மனம் திறந்து சொல்லுகிறேன். என் இல்லற இன்பத்தை இரு பங்கு வைத்து உங்களுக்கு ஒரு பங்கு தருகிறேன். என்னை சாதாரணமானவள் என்று எண்ணிவிட வேண்டாம். எனக்காக நீங்கள் தியாகம் செய்தீர்கள்—உங்களுக்காக நான் தியாகம் செய்கிறேன். எனது இல்லற வாழ்வு நமது இல்லற வாழ்வாக இருக்கட்டும் அக்கா! நாளை நாங்கள் வீட்டைக் காலி செய்துகொண்டு போகப் போகிருேம். ஸ்டுடியோவில் வீடு ஒதுக்கித் தந்திருக்கிருர்களாம். அக்கா! எங்களோடு வந்து விடுங்கள். அங்கே போய்விடுவோம். அக்கா, நாம் மூவரும் செல்வன் ராஜகுமாருடன் சந்தோஷமாய் வாழ்வோம்."

"தங்கம்! என்மீது கொண்டிருக்கும் வாஞ்சை உன்னை இப்படிப் பேச வைக்கிறது. உன் தூய அன்பு மாத்திரம் என்றும் நிலைத்திருக்கட்டும். அவர் உனக்கே உரியவர்—எனக்கல்ல! நான் இடையிலே வந்தவள். அன்றைக்கு விலக்கப்பட்டேன். இனி எனக்கு வாழ்வா? அதுவும் உன் இன்பத்தைப் பங்கு போடவா? வேண்டாமம்மா! நான் சொல்வதைக் கேள். பாதிரி மாத்திலே பலா பழுக்குமா? வறண்ட கரிசலில் நெல் விளையுமா? நான் கஷ்டப்பட பிறந்திருக்கிறேன். நீ வாழப் பிறந்தவள். நீ வாழ வேண்டும். அவருக்காக நீ வாழவேண்டாம். கடந்த காலக் களங்கத்தைப் போக்குவதற்காக நீ வாழவேண்டும். உன்னை மனப்பூர்வமாக வாழ்த்துகிறேன்."

என்று இன்னும் பலவாறு புலம்பித் தவிக்கும் தங்கத்திற்கு புத்தி கூறினேன். அவளுக்கோ என்னை விட்டுப் பிரிய மனமில்லை. எனக்கு வாழ்வு அளிக்க முன் வருகிறாள். அவளுக்கு நான் சக்களத்தி ஆவதா? இதை உலகம் ஏற்குமா? கணவனை விஷமிட்டுக் கொன்று விட்டு இன்று கள்ளக் காதலனோடு வாழ்கிறாள் கமலா —என்று சமூகம் ஏசுமே! எப்படியோ சமாதானம் கூறினேன் தங்கத்திற்கு! என்னிடம் விடை பெற்றாள் என் சகோதரி தங்கம். என் கையிலே ஒரு சின்னஞ்சிறு அழகான பெட்டியைக் கொடுத்து விட்டு சென்றாள். அதைத் திறந்து பார்த்தேன். அதில் ஒரு சிறு "பப்பர் மெண்ட்" இருந்தது.

பாவம்! தங்கம் சென்றாள். அப்பொழுது மேடம் க்யூரின் தத்துவம் நினைவுக்கு வந்தது. "பெண், பெண்மைக்கு ஓர் அணிகலம். துன்பக் கடலின் எல்லை. எல்லையிலாப் பொறை புகழின் வரை அடக்கத்தின் உயர்நிலை. தனக்கு உவமை யில்லாத வாழ்க்கைத் துணைவி"

இது தங்கத்துக் காகவே தீட்டப்பட்ட தத்துவம்போ லில்லையா?

அதற்கு மறுநாள் பள்ளியில் 'லீவ்' எடுத்தேன். காலையிலிருந்தே கலைமணியின் வீட்டைப் பார்ப்பதும் தையல் மிஷினை ஓட்டுவதுமாக இருந்தேன். அவருடைய வீட்டுச் சாமான்கள் ஒவ்வொன்றாக வெளியேறின. கார் வந்து நின்றது. வேலையில் கவனம் செல்லுமா? எழுந்து வந்து வாசற்படியில் நின்றேன்.

இருவரும்—கலைமணியும் தங்கமும் வீட்டை விட்டு வெளியேறினர். என்னைப் பார்த்தனர். விடைபெறும் குறி! என் நெஞ்சு பெருமூச்சைக் கிளப்பியது. பலவந்தமாக சிரிப்பை வரவழைக்க முயன்றேன். காரில் ஏறி அமர்ந்தனர்! "டடடா" சப்தம்! கார் கிளம்பியது மெதுவாக! இருவரும் கைக்குட்டையால் சமிக்ஞை செய்தனர். நானும் கைக்குட்டையை ஆட்டினேன். கையைத் தூக்கித் தூக்கி நின்ற கரம் மெள்ள மெள்ள தளர்ந்தது.

என் பார்வையிலிருந்து கலைமணியும், தங்கமும் மறைந்து விட்டார்கள். இனி........? என் மனத்தின் ஆழத்திலிருந்து நீண்டதொரு பெருமூச்சு கிளம்பிற்று. இராஜகுமார் என் பிடியி லிருந்து திமிறினன். சின்னம்மாவிடம் சிட்டாய்ப் பறந்து செல்ல துடிக்கிறுன். விடுவேனு? எனக்கு இன்பம் எங்கே? இதோ என் அருமை மகன் ராஜகுமார்தானே!

பெருமூச்சு—குழப்பம்—கண்ணீர்—திகைப்பு—தேறுதல்—இவை களே வழுக்கி விழுந்த வனிதையின் படலங்கள்! ஒழுகிய கண் ணீரை முந்தானையால் துடைத்து விட்டுக் கொண்டேன். என் இன்பம் இராஜகுமார் என் பிடியிலிருந்து நழுவி விடாமல்......? அவனுடைய சின்னஞ் சிறு கரத்தை இறுகப் பற்றிக்கொண் டேன். என் வாழ்க்கைச் சுரங்கத்திலே—வெகு ஆழத்துக் கிடங் கில் சிரமத்துக் கிடையே தோண்டி எடுக்கப்பட்ட தங்கம்அல்லவா அவன்! இந்த உலகில் எனக்கு அவன் ஒருவன்தானே துணை! மேலும் மேலும் அவனுடைய கையை அழுத்தமாக பிணைத்துக் கொண்டு அப்படியே நின்றேன். இன்னும் நிற்கிறேன். வழுக்கி விழுந்தவள் கதை இப்படித்தான் முடியுமா?

காதல் என்பது ரப்பர் பலூன்: —காண்டேகர்.

முற்றும்.

# புதிய புத்தகங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| புராண மதங்கள் | அறிஞர் அண்ணா | 1 | 0 | 0 |
| தேன் துளிகள் | ,, | 1 | 0 | 0 |
| நாநா | (எமிலிஜோலா) | 1 | 0 | 0 |
| வழுக்கி விழுந்தவள் | விருதை, ந. ராமசாமி | 1 | 0 | 0 |
| என் வாழ்வு | "ரத்தினம்" | 0 | 10 | 0 |
| காதல் சிரித்தது | (தங்கமணி) | 0 | 8 | 0 |
| உலகைத் திருத்திய உத்தமர்கள் | (ஊடுருவி) | 1 | 0 | 0 |
| ரஸ்புடீன் | (ஊடுருவி) | 0 | 8 | 0 |
| கொலைக்களம் | மு. கருணாநிதி | 0 | 8 | 0 |
| தூக்குமேடை | ,, | 1 | 8 | 0 |
| பெரிய இடத்துப் பெண் | ,, | 0 | 8 | 0 |
| தப்பிவிட்டார்கள் | ,, | 0 | 6 | 0 |
| கோவையில் கருணாநிதி | ,, | 0 | 8 | 0 |
| நச்சுக்கோப்பை | ,, | 0 | 12 | 0 |
| வாழமுடியாதவர்கள் | ,, | 0 | 12 | 0 |
| அவள் வாழ்வு | (ஆசைத்தம்பி) | 0 | 8 | 0 |
| எழிலரசி கிளியோபாட்ரா | "குமரிமன்னன்" | 1 | 8 | 0 |
| வானம்பாடி | ரா. தணலன் | 1 | 8 | 0 |
| பசி | கே. ஜி. இராதாமணாளன் | 1 | 0 | 0 |
| துரோகி | தில்லை வில்லாளன் | 2 | 0 | 0 |
| செங்கிஸ்கான் | | 1 | 0 | 0 |

வியாபாரிகளுக்கு அதிக கமிஷன் உண்டு.

விற்பனை உரிமை:

**எம். எஸ். ராமுலு கம்பெனி**

2/6, சைனுபசார், — சென்னை - 1

Printed by The Srim[illegible] Company, Madras-1